# ராமானுஜர்

வைணவக் கைப்பிடி கொண்டு நம் இதயக் கதவைத்
திறந்த மகானின் திவ்ய சரிதம்





இந்திரா பார்த்தசாரதி

ராமானுஜர்
Ramanujar

First Edition : February 2007; 104 Pages, Price Rs. 50
Printed in India.



*Varam* – 36 ; ISBN : 978-81-8368-301-2

*Varam*, An imprint of
New Horizon Media Private Limited
# 33/15, Eldams Road, Alwarpet, Chennai 600 018, Tamilnadu, India.
Phone : 044-42009601/03/04; Fax : 044-43009701
In Madurai: 4/7, East Pattamar St., Madurai-1. Ph : 0452-4230701.
In Coimbatore: 201, 2nd Floor, Sri Vasavi Complex, Periya Kadai Veedhi, Coimbatore – 1. Ph: 0422-4208601

Email: sales@nhm.in
Web : www.nhm.in
Author's Email: nadaadur2k@yahoo.com




*An Imprint of*
New Horizon Media
Pvt. Ltd.

Publisher
Badri Seshadri
Chief Editor
Pa. Raghavan
Editors : Vasudev, R. Parthasarathy, A.R. Kumar
Asst. Editor : Uma Sampath
Chief Designer : T. Kumaran
Design Team : S. Kathiravan, E. Saravanan, R. Giridharan, R. Parthasarathy
Proof Reader : Saidhai Murali



வரம்

வெளியீடு

## மனம் மகிழட்டும்

*(சர்வ மதங்களுக்கும் பொதுவான பிரபஞ்ச சக்தியைப் போற்றும் துதி)*

- உலகமெல்லாம் நிறைந்த பரம்பொருளே
எல்லா உயிரும் நீயே
எல்லா செல்வங்களும் நீயே
உனது அருள் எப்போதும் எங்களைக்
காத்து நிற்கிறது
இந்த உண்மையை நாங்கள் உணர
அருள்புரிவாய்.

- பசிக்கு உணவு ஆவாய்
பருகும் நீர் ஆவாய்
நோய்க்கு மருந்தாவாய்

- இருள்போக்கும் ஒளியே
வறுமை நீக்கும் செல்வமே
வாழ்வும் வளமும்
உனது நன்கொடைகள்
அன்பும் அறனும் உனது
அற்புதப் படைப்புகள்

- பிரபஞ்சமே பராசக்தியே
உன்னில் பிறந்து
உன்னில் வளரும் எங்களை
உன்னதமாக்கி அருள்புரிவாய்!

## உள்ளே...

## தமிழகத்தில் உதித்த மகான்



தன்னைக் காட்டிலும் மகத்தான சக்தி உண்டு என்று எப்போது மனிதன் உணர்ந்தானோ, அப்போதே கடவுளும் தோன்றிவிட்டார். மனிதனால் புரிந்து கொள்ள முடியாத ஒவ்வொரு சக்தியும் ஆற்றலும் வேத காலத்தில் தெய்வமாயிற்று. இறைநிலையின் கருத்து ஒருமைப்பாட்டை மனிதன் உணரத் தொடங்கிய போது தான், உபநிஷத்துக்கள் எழுந்தன.

வேதக் கருத்துக்களுக்குக் கதை மாதிரியான விளக்கம் - காவியங்கள். வேதங்களில் கூறப்பட்ட சில்லறைத் தெய்வங்கள் உயர்ந்த பீடமேறி முழு முதற் கடவுளாயின. திருமால் வழிபாடு நாடு எங்கும் பெருமளவில் பரவியது. வேதத்துக்குப் புறத்தே உண்டான பகவான் என்ற கருத்தும், திருமால் வணக்கமும் ஒன்று இணைந்து, வைஷ்ணவம் உண்டாயிற்று. தமிழகத்தில் தோன்றிய ஆழ்வார்கள் வளர்த்த பக்தி இயக்கம், வைஷ்ணவத்துடன் கொண்ட தொடர்புதான், விசிஷ்டாத்வைதம் பிறந்த கதை.

வைஷ்ணவம், சமய நெறி. விசிஷ்டாத்வைதம், தத்துவ

பெருவிளக்கம். இரண்டையும் ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்க முடியாது. ரிஷிகள், பாகவதர்கள், ஆழ்வார்கள் ஆகியோ ருடைய இறை அனுபவமே விசிஷ்டாத்வைதம் என்ற பக்தித் தத்துவம் ஏற்படுவதற்குக் காரணம்.

ராமானுஜர் தமிழகத்தில் பிறந்தவர். ஆழ்வார்களின் வரலாற் றிலும் அவர்களின் போதனைகளிலும் மிகவும் ஈடுபட்டவர். ஆகவே ராமானுஜர் வரலாற்றை, ஆழ்வார்களின் வரலாற்றுப் பின்னணியில் பார்த்தால்தான், வைஷ்ணவ சமயத்தின் தத்துவங்களை நம்மால் உணரமுடியும்.

ஆழ்வார்கள் பன்னிருவர். இவர்கள் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்ததாகப் புராதனச் செய்திகள் கூறினாலும், சரித்திர ஆசிரியர்கள், இவர்கள் காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் இருந்து கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரை என்று உறுதியாகக் கூறுகிறார்கள்.

முதலாழ்வார்கள் மூவர். பொய்கை, பூதம், பேய் என்று அழைக்கப்பெறும் இவ்வாழ்வார்கள் தொண்டை நாட்டைச் சேர்ந்தவர்கள். பொய்கையாழ்வார் பிறந்த இடம் காஞ்சி. பூதத்தாழ்வார் மகாபலிபுரத்தைச் சேர்ந்தவர். பேயாழ் வாருடைய ஊர் மயிலையாகும். இம்மூவரும் சந்தித்த செய்தி ஒரு சுவைமிக்க நிகழ்ச்சியாக பேசப்படுகிறது.

ஓரிரவு நல்ல மழை பெய்துகொண்டிருந்தது.

பொய்கையாழ்வார் தங்குமிடம் நாடி, ஓர் சிறிய இடத்தில் ஒதுங்கினார். ஒருவர் படுக்கப் போதுமான அவ்விடத்தில் அவர் கால் நீட்டிப் படுத்தார். அப்பொழுது அங்கு பூதத்தாழ் வார் வந்தார். ஒருவர் படுக்கப் போதுமான அவ்விடம், இருவர் உட்கார வசதி அளித்தது. சிறிது நேரம் கழித்து, அங்கு பேயாழ்வார் வந்தார். இருவர் அமர வசதியளித்த இடம் மூவர் நிற்பதற்கு உதவியது. மூவரும் ஒருவரையொருவர் விசாரித்துக் கொண்டு திருமாலின் குண விசேஷங்களிலே ஆழ்ந்தனர். மூவருமே நெருக்கத்தில் இருந்தனர். அப்போது நாலாவது

நபரொருவர் அங்கு வந்திருப்பதை அவர்கள் உணர்ந்தார்கள். இந்த நாலாவது நபர் யார்? பொய்கையார் கதிரவனை விளக் காக்கி ஏற்றிப் பார்த்தார். பூதத்தார் ஞானத்தைத் தீபமாக்கினார். பேயாழ்வார் கதிரவனும், ஞானமும் உண்டாக்கிய பேரொளி யில் உள்ளதை உள்ளவாறு உணர்ந்தார். மூவரும், 'களவு செய்யினும் ஒளிக்க வொண்ணாதபடி பிரிவற்ற சேர்த்தி யையுடைய பெரிய பிராட்டியரோடு பகவத் ஸ்வரூபத்தை'க் கண்டனர். இம்மூவரின் இறை அனுபவமே முதல் மூன்று அந்தாதிகளின் தோற்றம்.

முதலாழ்வார்களுக்குப் பிறகு தோன்றியவர் திருமழிசைப் பிரான். இவர் ப்ருகு மகரிஷிக்கும், கனகாங்கி என்ற தெய்வ மாதுக்கும் புதல்வராக அவதரித்தார். காட்டில் விடப்பட்ட இவரைத் திருவாலினென்ற ஒரு வேடன் எடுத்து வளர்த்தான்.

திருமழிசைப் பிரானுக்குப் பல ஸித்திகள் கை வந்தன. இவர் பல அற்புதங்கள் நிகழ்த்தியதாகப் பரம்பரைச் செய்திகள் கூறு கின்றன. இவர் ஒரு சமயம், ஒரு கிழவியை அழகிய குமரியாக் கினார். அந்நாட்டரசன் அவள் மீது மையல் கொண்டு அவளை மணந்தான். காலத்தால் நலிவுறாத அவள் அழகு அரசனுக்குப் பெரும் வியப்பை அளித்தது. அவன் அதன் ரகசியம் பற்றிக் கூறும்படி அவளிடம் வினவினான். அப்பெண், திருமழிசை யாழ்வாருடைய ஆற்றலினால், தான் குமரியான கதையைப் பற்றிக் கூறினாள். ஆழ்வாரைக் காண விரும்பிய அரசன், அவருடைய சிஷ்யனாகிய கணிகண்ணனை வரவழைத்து, 'ஆழ்வாரை அவைக்கு அழைத்துவர வேண்டும்' என்றான். 'இறைவன் ஒருவனையே தலைவனாகக் கொண்ட ஆழ்வார், அரச கட்டளைக்குப் பணியமாட்டார்' என்றார் கணி கண்ணன். வெகுண்ட அரசன் தனக்கும் இளமை வர ஒரு கவி பாடும்படி சிஷ்யனை வற்புறுத்தினான். 'நாக்கொண்டு மானிடம் பாடேன்' என்றான் கணிகண்ணன். அரசன் அவனை நாடு கடத்தினான். கணிகண்ணன் குருவிடம் சென்று, நடந்ததைக் கூறி, நாட்டை விட்டுப் புறப்பட்டான். திருமழிசை ஆழ்வாரும், சிஷ்யனுடன் கிளம்பி விடுகிறார். திருமாலிடம்

தம் பைந்நாகப்பாயைச் சுருட்டிக்கொண்டு அவரும் புறப்பட வேண்டும் என்று கட்டளை இடுகின்றனர். சொன்ன வண்ணம் செய்தார் இறைவன்.

பெருமாள் ஊரைவிட்டுக் கிளம்பக் கண்ட மக்கள், தாமும் அவரைப் பின்பற்றினார்கள். மக்களும் தெய்வமும் ஊரை விட்டுப் புறப்பட்டதைக் கண்ட அரசன், ஆழ்வாரிடம் சென்று அவர் பாதங்களைத் தொட்டு வணங்கி, ஊருக்குத் திரும்பும் படி வேண்ட, அவரும் அவனுக்கு அருள் பாலித்துத் திரும்பி னார். பக்தியின் சக்தியை உணர்த்துவது இக்கதை.

'மாற்றலரை வீரம் கெடுத்த செங்கோல் கொல்லி காவலனாகிய' குலசேகராழ்வார், கங்கு கரைகாணா பக்தி நெறியாளர். ஒரு சமயம், ராமாயணப் பெருங்கதையை அவர் கேட்டபோது, ராமனுக்கு ஆபத்து என்ற உபன்யாசகர் வார்த்தையை நடப்பாகத் துணிந்து, பெரும் படையைத் திரட்டிச் சக்ரவர்த்தித் திருமகனுக்கு உதவியாகப் புறப்பட்டார் என்று கூறுவர். ஒருமுறை வைணவ அடியார்கள் மேல் குற்றம் சுமத்தப்பட்டபோது, அவர்கள் சார்பாக இவர், பாம்புக் குடத்தில் கைவிட்டு, 'ஆரங்கெட பரனன்பர் கொள்ளார்' என்று நிரூபித்ததாகப் பழஞ் செய்திகள் கூறுகின்றன.

திருவரங்கத்தில் கிடந்த வண்ணக்கோலம் கொண்ட திரு மாலையும் அவர்தம் அடியார்களையும் தரிசனம் செய்ய ஆசைப்பட்ட குலசேகரர் சோழ நாடு வந்தார். திரு வரங்கத்தையும் இன்னும் பல திவ்ய ஸ்தலங்களையும் கண்டு மகிழ்ந்தார். இவர் இயற்றியுள்ள பெருமாள் திருமொழி இவருடைய இணையற்ற பக்தி உணர்ச்சிக்குச் சான்று. நாடு விட்டுக் காடு சென்ற ராமனின் பிரிவைத் தந்தை தசரதன் நிலையில் இருந்து பாடும் இவ்வாழ்வாரின் பாடல்கள் தமிழிலக்கியத்துக்குக் கிடைக்கப்பெற்ற அருமையான கவிதைக் கருவூலங்கள். தந்தை-மகன் உறவு முறைதான் இறை வனுடன் ஒரு நெருக்கத்தை உண்டாக்கும் வலிமையுடையது என்பதை இது வலியுறுத்துகிறது.

திருமண்டங்குடியில் பிறந்த தொண்டரடிப் பொடியாழ் வாருக்கு இயற்பெயர் விப்ரநாராயணர். இவர் திருவரங்கப் பெருமானுக்கென நந்தவனம் அமைத்து, பூ மாலைகள் தொடுத்துக் கொடுத்து வாழ்ந்து வந்தார். பெண்களை ஏறெடுத்தும் பார்ப்பதில்லை என்று உறுதி கொண்டிருந்த இவரை, பரிசோதிக்க விரும்பினார் இறைவன்.

திருவரங்கத்தில் பூஞ்சோலைக் கைங்கர்யம் செய்து கொண்டிருந்த விப்ரநாராயணர் முன், பேரழகு உடைய தேவ தேவி என்ற பெண் தோன்றினாள். தான் அனாதை என்றும், ஆழ்வார் தன்னை ஆதரிக்க வேண்டும் என்றும் கெஞ்சினாள். திருநந்தவனத்தில் களை எடுப்பதாகவும் வாக்களித்தாள். அவள் நிலையைக் கண்டு மிகவும் இரங்கிய திருமாலடியார் அவள் வேண்டுகோளுக்கு இசைந்தார்.

ஒரு நாள் நல்ல மழை பெய்தது. விப்ரநாராயணர் தம் குடிசைக் குள் இருந்தார். வெளியே தேவதேவி மழையில் நனைந்து வருந்துவதைக் கண்ட அவர் அவளை உள்ளே வரும்படி அழைத்தார். ஈரம்பட்ட இடமெல்லாம் அவள் உடம்பு வளம் தெரிய, பொலிவுற்று விளங்கியது. விப்ரநாராயணர் அவளுக்கு மாற்றுடை கொடுத்து அணியும்படி கூறினார். பெண்களை ஏறெடுத்துப் பார்க்காத பக்தர், தேவதேவியை ஏறெடுத்துப் பார்த்தளவில் மனம் மயங்கினார். காமம் கண்களை மறைத்தது. தேவதேவிக்கு அடிமையானார் விப்ரநாராயணர்.

பரிசோதனையில் தோற்றுவிட்ட விப்ரநாராயணரை மீண்டும் ஆட்கொள்ள விரும்பினார் இறைவன். பொருளையெல்லாம் தேவதேவியிடம் கொடுத்தபிறகு, அவளுக்கு வேறொன்றும் அளிக்க முடியாததால், அவளால் புறக்கணிக்கப்பட்டு, அவள் மாளிகை வாசலிலேயே மோகித்துக் கிடந்தார் விப்ர நாராயணர். கோயில் பொன்வட்டிலை எடுத்துச் சென்று தேவதேவியிடம் விப்ரநாராயணர் கொடுக்கச் சொன்னதாகச் சேர்ப்பித்தார் இறைவன். அடுத்தநாள் காலை கோயில் வட்டில் காணாமல் போய் தேவதேவியிடம் இருப்பதாக அறிந்த அரசனின் காவலர்கள் அவளை அவைக்கு அழைத்துச்

சென்றனர். அவள் விப்ரநாராயணர் அவ்வட்டிலைத் தன்னிடம் ஒரு ஆள் மூலம் கொடுத்தனுப்பியதாகக் கூற, விப்ரநாராயணரை அழைத்து வரச் சொன்னான் அரசன். அப்பொழுது இறைவன், அசரீரியாக 'விப்ரநாராயணருக்காகத் தேவதேவிக்கு வட்டிலை நாமே கொடுத்தோம். இது நம்முடைய லீலையே!' என்றார். இந்நிகழ்ச்சிக்குப் பிறகு விப்ரநாராயணர், தம் செயலுக்கு வருந்தி முன்னைக் காட்டிலும் அதிகமான உறுதியுடன் திருமால் பாதங்களைப் பற்றினார். திருமால் பக்தர்களின் பாதங்களே தாம் உய்வதற்கு மார்க்கமென்று இவர் பற்றின காரணத்தால் இவருக்குத் தொண்டரடிப் பொடியாழ்வார் என்ற பெயர் ஏற்பட்டது. இவர் இயற்றிய நூல்கள் 'திருமாலை', 'திருப்பள்ளியெழுச்சி'.

திருப்பாணாழ்வார் ஹரிஜன வகுப்பிலே பிறந்தவர். ஆகவே, இவர் திருவரங்கம் கோயிலுக்குள்ளே போகமுடியாத நிலையில், வெளியே நின்று இறைவனைத் தொழுது வந்தார். பாணர் குடும்பமென்பது, வழிவழியாக இசையை வளர்த்த குடியாகும். திருப்பாணாழ்வார், காவேரிக் கரையில் இருந்து திருமாலின் புகழை இனிய இசை மூலம் துதி செய்தார். ஒரு நாள், காவேரிக் கரையில் இறைவனைத் திருமஞ்சனமாட்ட புனிதநீர் கொண்டுபோக வந்த கோயில் அர்ச்சகர், அங்கு திருப்பாணாழ்வார் நிற்கக் கண்டு, அவரை ஒதுங்குமாறு அதட்டினார். தியானத்தில் இருந்த திருப்பாணாழ்வாருக்கு அர்ச்சகர் சொல் செவியில் ஏறவில்லை. இதைக்கண்டு கோபப்பட்ட அந்த அந்தணர், திருப்பாணாழ்வார் மீது கல்லெறிந்தார். ஆழ்வாரின் புனித உடலில் இருந்து ரத்தம் கசிந்தது. கோயிலுக்குச் சென்ற அர்ச்சகர் மீது இறைவன் கோபித்து, ஆழ்வாரைக் கோயிலுக்குள் தோள் மீது வைத்து அழைத்து வருமாறு கட்டளையிட்டார். திருப்பாணாழ்வார் 'அமலனாதி பிரான்' என்று தொடங்கும் பாசுரங்களை இறைவன் மீது பாமாலையாகச் சூட்டி மகிழ்ந்தார்.

ராமானுஜருக்குத் திருப்பாணாழ்வார் வரலாற்றிலே மிகுந்த ஈடுபாடு உண்டு. இறைவன் திருவருளைப் பெற ஒருவர்

உயர்ந்த குடியில் பிறக்க வேண்டுமென்ற அவசியமில்லை என்ற அவருடைய கொள்கையைத் திருப்பாணாழ்வார் வரலாறு வற்புறுத்தியது.

திருமங்கை மன்னன் ஒரு குறுநிலத் தலைவர். அவர் குமுதவல்லி என்ற ஒரு வைணவ நங்கையின் மீது மிகுந்த விருப்பம் கொண்டு மணக்க விரும்பினார். ஆனால் அந்தப் பெண், நாளொன்றுக்கு ஆயிரம் அடியார்களுக்கு ஓராண்டு முழுவதும் அன்னதானம் செய்து வந்தால் மணப்பதாக வாக்குறுதி அளித்தாள். அவரும் அவ்வாறே செய்து வந்தார். அவரை ஆட்கொள்ள நினைத்த இறைவனும், ஒரு சமயம் பெரிய பிராட்டியரோடு, புதுமணத் தம்பதிகள்போல், காட்டு வழியே வந்தார். பொருளெல்லாம் செலவழிந்துபோக, வழிப்பறி செய்து அன்னதானம் செய்து வந்த பரகாலர், இத்தம்பதிகளைச் சந்தித்தார். மணப்பெண்ணின் திரு மேனியை அலங்கரித்த அணிகளையெல்லாம் எடுத்துக் கொண்ட பிறகு, அந்த ஆபரணங்களை வைத்த பெட்டியைத் தரையிலிருந்தும் எடுக்க முடியாமல் திகைத்தார். மணப் பிள்ளையின் மந்திர வலிமைதான் இதற்குக் காரணமென்று நினைத்த பரகாலர், 'அம்மந்திரத்தை எனக்கும் சொல்லிக் கொடு' என்று வாள் உருவிக்கொண்டு கேட்டபோது, இறைவன் அவர் காதில் திருமந்திரத்தை சொல்லி அருளினார். ஆழ்வார், திவ்யதம்பதிகளை வணங்கி, அவர்தம் திருப்பாதங்களிலே சரண் புகுந்தார். இந்த அனுபவம் பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்ற பாசுரங்களாக விளக்கம் பெற்றது. ஆசு, மதுரம், சித்ரம், விஸ்தாரம் முதலான சாதுர்யத்தையுடைய திவ்ய கவிதை களை இவர் இயற்றிய காரணத்தால் இவருக்கு, நாலு கவிப் பெருமாள் என்ற பெயருமுண்டு.

பெரியாழ்வார் என்று அழைக்கப்படும் விஷ்ணு சித்தர், ஸ்ரீவில்லிப்புத்தூரைச் சார்ந்தவர். இவர் மிகப் பெரிய கிருஷ்ண பக்தர். பக்தி என்ற இயல்பான உணர்வினால் உந்தப்பட்டு

இறைவன் புகழ்பாடி வந்த இவருக்கு வேத ஞானம் மிகுதி யாக இல்லை. ஒரு சமயம், பாண்டிய அரசன், அவர் தன் அவைக்கு வந்து வேத விளக்கம் செய்ய வேண்டும் என்று கட்டளையிட்டான். விஷ்ணு சித்தர் கனவில் தோன்றிய இறைவனும் அவரைச் செல்லுமாறு பணித்தான். அரசவை சென்ற ஆழ்வாருக்கு தம்முடைய வேத ஞானம் மிகுந்த ஆச்சரியத்தைத் தந்தது. 'எல்லாம் அவன் அருள்' என்று மகிழ்ந்தார். பட்டத்து யானை மீது அவரை நகர்வலம் செய் வித்தான் பாண்டிய மன்னன். அப்பொழுது அவர் தெய்வக் காட்சியில் மூழ்கிப் பாடிய பாசுரங்கள், 'திருப்பல்லாண்டு' 'பெரியாழ்வார் திருமொழி' என்று அழைக்கப் பெறுகின்றன.

பெரியாழ்வாரின் வளர்ப்புப் பெண் ஆண்டாள். அந்தண வகுப்புக் கட்டுப்பாடுகளுடன் அவள் வளர்க்கப்பட்டு வந்தாள். ஆண்டாள் மழலைப் பருவத்திலேயே கிருஷ்ணனைத் தன் வருங்காலக் கணவனாக வரித்துவிட்டாள். ஒரு சமயம் ஆண்டாள், கோயிலுக்குக் கட்டிவைத்த திருமாலையை எடுத்துச் சூட்டிக்கொண்டு, மற்ற பிற அணிகளையும் பூட்டிக் கொண்டு ஒரு கண்ணாடியில் தன்னைப் பார்த்து, 'இவ்வழகு எம்பெருமானுக்கு ஒத்திருக்குமோ?' என்று எண்ணினாள். இதுவே அவளுக்கு வழக்கமும் ஆயிற்று. இதை ஒருநாள் கண்ட பெரியாழ்வார் மகளைக் கண்டித்தார். அன்றிரவு இறைவன் அவர் கனவில் தோன்றி, 'அவள் சூடிக் கொடுத்த மாலையே நமக்கு பிடித்தமானது' என்றார். இதுவே ஆண்டாளுக்கு 'சூடிக் கொடுத்த நாச்சியார்' என்று பெயர் வரக் காரணமாயிற்று. ஆண்டாள் இயற்றிய பாசுரங்கள் 'திருப்பாவை', 'நாச்சியார் திருமொழி'.

ஆழ்வார்களுக்குள்ளே மிகச் சிறந்தவராக, தத்துவம் வகுத்துச் சென்ற பெரியோராகக் கருதப்படுபவர் நம்மாழ்வார். இவர் திருக்குருகையில் அவதரித்தார். இவர் இயற்பெயர் மாறன். பிறந்தவுடனேயே புளிய மரத்தடியில் தியானம் மேற்கொண்டு வாழ்ந்தார். பல ஆண்டுகள் இவ்வாறு இருந்து வந்த இவரின் பெருமையை உலகறியச் செய்தவர் மதுரகவியாழ்வார்.

வடநாட்டில் பல புண்ணியத் தலங்களைத் தரிசித்துக் கொண்டு இருந்த மதுரகவி, அங்கு ஒரு பேரொளி கண்டு, அதைப் பின்தொடர்ந்து வந்து திருக்குருகை வந்தார். ஆழ்வாரைப் பார்த்து மதுரகவி 'செத்ததின் வயிற்றிலே சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?' என்று விண்ணப்பம் செய்ய, அவர், 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்று அருளிச் செய்தார். இது ஆத்மாவுக்கும், சரீரத்துக்கும் உள்ள தொடர்பு குறித்த உரையாடல் ஆகும். மதுரகவி, நம்மாழ்வாரின் சிஷ்யரானார்.

நம்மாழ்வார் இயற்றியுள்ள திருவிருத்தம், திருவாசிரியம், திருவாய்மொழி, பெரிய திருவந்தாதி ஆகிய நான்கையும், ஸ்ரீ வைஷ்ணவர்கள் நான்கு வேதங்களாகக் கொண்டாடுகின்றனர். நம்மாழ்வாரின் திருஉருவம் ஒவ்வொரு பெருமாள் கோயிலிலும் உண்டு. மற்றைய ஆழ்வார்கள் எல்லோரும் நம்மாழ்வாரின் அம்சங்களாகவே கருதப்படுகின்றனர்.

மதுரகவியாழ்வார் பன்னிரண்டாவது ஆழ்வாராகக் கொண்டாடப்படுகிறார். அவர் இயற்றியுள்ள 'கண்ணி நுண் சிறுத் தாம்பு', நம்மாழ்வார் பெருமை பேசும்.

பன்னிரண்டு ஆழ்வார்கள் இயற்றியுள்ள பாசுரங்கள் நாலாயிரம். இவை திவ்ய பிரபந்தம் என்று அழைக்கப்படுகின்றன. உபநிஷத்தின் ஸாரமென்றும் கூறுவர். பின்னால் வந்த ஆச்சாரியார்கள், விசிஷ்டாத்வைதம் என்ற வைஷ்ணவ தத்துவத்தை இந்தப் பக்தி இலக்கியம் மூலமாகத்தான் நிறுவினர். நாலாயிரத்தைத் தொகுத்தவர் நாதமுனிகள். நான்கு ஆயிரங்களாகத் தொகுத்து, ஒவ்வொரு ஆயிரமும் ஒவ்வொரு வேதமென்று நிலைநாட்டினார் இந்த வைஷ்ணவ ஆச்சாரியார்.

தஞ்சை மாவட்டத்தில் மன்னார்குடியில் பிறந்தவர் நாத முனிகள். இவர் பிறந்த ஆண்டு கி.பி.824.

ஒரு சமயம் குடந்தையில் நாலாயிரத்தில் சில பாசுரங்களைச் சில வைணவ பக்தர்கள் பாடக் கேட்டு, இத்தகைய

செய்யுள்கள் உள்ளன என்ற உண்மையை நாதமுனிகள் முதல்முதலாக அறிந்தார் ஆழ்வார்கள் காலத்துக்குப் பிறகு இந்தப் பாடல்கள் வழக்கொழிந்து இருந்தன. பன்னிரு ஆழ்வார்கள் வாழ்ந்த இடமெல்லாம் நாதமுனிகள் சென்று, நாலாயிரம் பாசுரங்களையும் சேகரித்துத் தொகுத்தார். இதனாலேயே வைணவ சமயமும், தமிழிலக்கியமும் அவருக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளன.

நாதமுனியின் பேரர், ஆளவந்தார் என்றழைக்கப்பட்ட யமுனாச்சாரியார். அவர் சிறுவராக இருந்தபோது, சோழ அரசனுடைய சபையில் கர்வம் கொண்டிருந்த ஒரு பண்டிதனை வாதத்தில் வென்றதால், அரசி அவரை 'ஆளவந்தார்' என்று அழைத்தாரென்றும், அப்பெயர் நிலைத்துவிட்டதென்றும் கூறுவர். அரசனால் சிறப்பிக்கப்பட்டு ராஜ போகத்திலிருந்த அவரை மணக்கால் நம்பி, திருவரங்கப் பெருமானிடம், அழைத்துச் சென்று, 'இதுவே உம் பூர்வர்கள் உமக்குத் தேடி வைத்த 'மகாநிதி' என்று கூற, அன்றுமுதல் திருமாலின் பாதங்களைப் பற்றி வாழ்ந்தார் என்பது வரலாறு. ஆளவந்தார் ஞான, பக்தி, வைராக்கிய அனுஷ்டானங்களில் சிறந்தவர். இவருடைய சிஷ்யர்களிலே குறிப்பிடத்தக்கவர்கள் பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலைநம்பி, திருமலையாண்டான், மாறனேரி நம்பி, திருக்கச்சிநம்பி ஆகியோர். இவர்கள் ராமானுஜர் வரலாற்றிலே பெரும் பங்கு பெறுகின்றனர்.

ஆளவந்தாரைத் தொடர்ந்து, வைணவ ஆச்சாரியர் பட்டமேறியவர் ராமானுஜர்.

# ஒரு கொலைச் சதி



ஆளவந்தாருக்குப் பதினாறு சிஷ்யர்கள். அவர்களிலே ஒருவர் பெரிய திருமலை நம்பி. அவர் திருப்பதியில் வசித்து வந்தார். உலகத்துக்குக் கைங்கர்யம் செய்து வந்ததன் மூலம், இறைவனைத் தொழுது வந்தார். வைஷ்ணவ மதத்தின் அடிப்படையான இலட்சியம் கைங்கர்யம். அவருக்கு இரு சகோதரிகள் உண்டு; காந்திமதி, ஸ்ரீதேவி. ஸ்ரீபெரும்புதூரைச் சேர்ந்த கேசவ சோமயாஜியின் மனைவி காந்திமதி. மழலை மங்கலத்தைச் சார்ந்த கமல நயனப் பட்டரின் மனைவி ஸ்ரீதேவி.

கேசவரும், காந்திமதியும் பல ஆண்டுகள் புத்ரபாக்கியம் இல்லாமல் இருந்தனர். கேசவர் புத்திரகாமேஷ்டி யாகம் செய்தார். இறைவனின் திருவருளால் கி.பி. 1017-ல் அவருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தை பிறந்த செய்தி, திருப்பதியில் இருந்த பெரிய திருமலைநம்பிக்கு எட்டியது. அவர் குழந்தையை வாழ்த்துவதற்காக வந்தார்.

குழந்தையின் முகத்தில் ஒளி வீசியது. 'லக்ஷ்மணோ

லக்ஷ்மி ஸம்பந்ந:' என்றார் பெரிய திருமலைநம்பி. ராமனு டைய தம்பி லட்சுமணனின் அடையாளங்களும் நலங்களும் தெரிந்தபடியால், குழந்தைக்கு ராமானுஜன் என்று அவர் பெயரிட்டார்.

காந்திமதியின் தங்கை ஸ்ரீதேவிக்கும் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்குக் கோவிந்தன் என்ற நாமம் சூட்டினார்கள்.

ஸ்ரீபெரும்புதூரிலிருந்த வைஷ்ணவர்கள் அனைவரும் வந்து ராமானுஜருக்கு ஆசி கூறினர். அவர்களிலே ஒருவர் திருக்கச்சி நம்பி.

திருக்கச்சி நம்பி, கேசவ சோமயாஜியின் நண்பர். ஸ்ரீ வைஷ்ண வத்துக்காக வாழ்ந்த இவர் வைசிய குலத்திலே பிறந்தவர். அக்குலத்திலே பிறந்திருந்தாலும், செல்வத்தை அவர் வெறுத் தார். ஒரு சமயம் அவர் தந்தை, அவர் செல்வத்தை எங்கே சேகரித்து வைத்திருக்கிறார் என்று கேட்க, அவர் மேல் நோக்கிக் கையைக் காட்டிச் சிரித்தார். காஞ்சிநகர்ப் புறத்தே வாழ்ந்து வந்த இவர்மீது அனைவருக்கும் மிகுந்த மதிப்பும் மரியாதையும் இருந்து வந்தன.

ராமானுஜரின் ஆரம்பக் கல்வி அவர் தந்தை மூலம் துவங்கியது. மகன் மேதை என்று உணர்ந்தார் கேசவ சோமயாஜி. ஆகவே, அவரை மேலும் படிக்கக் காஞ்சிக்கு அனுப்பி வைத்தார்.

காஞ்சியிலே யாதவப் பிரகாசர் என்ற ஒரு அத்வைத ஆசிரியர் பாடம் சொல்லி வந்தார். கூர்மையான அறிவும் தத்துவத்தின் எல்லை தேர்ந்த கல்வியுமுடைய இந்த ஆசிரியரிடம், எல்லா திசைகளிலிருந்தும் மாணவர்கள் வந்து படித்தனர்.

ஸ்ரீதேவியின் மகன் கோவிந்தனும், ராமானுஜரோடு சேர்ந்து காஞ்சியில் படிக்கத் தொடங்கினார்.

ராமானுஜர் தலைசிறந்த மாணவராக இருக்கக் கண்ட யாத வருக்கு அவர்மேல் ஒரு தனி அன்பு ஏற்படத் தொடங்கியது.

காஞ்சியில் இருந்தபோது ராமானுஜர் தம் தந்தையின் நண்பராகிய திருக்கச்சி நம்பியை அடிக்கடி சந்தித்து வந்தார்.

யாதவர் அத்வைதத்தில் நம்பிக்கை கொண்டவர். அத்வைதம் அறிவுப்பூர்வமானது. ஆகவே, அவர் வேதாந்தத்தை அறிவுப் பூர்வமாக விளக்கி வந்தார். ஆனால், திருக்கச்சி நம்பியோ பக்தியில் உறுதிகொண்டு, அவ்வழி நின்ற பெரியார். ராமானுஜரை யாதவரின் அறிவு வழியைக் காட்டிலும், திருக்கச்சி நம்பியின் இதய வழி ஈர்த்தது.

இதன் காரணமாக, யாதவருடைய வேதாந்த விளக்கங்களுடன் மாறுபடத் தொடங்கினார் ராமானுஜர்.

ஒரு சமயம் யாதவர், 'ஸத்யம், ஞானம், அனந்தம் ப்ரஹ்ம' என்பதற்கு விளக்கம் தரும்போது, அத்வைத அடிச்சுவட்டில் பொருள் கூறினார். 'ஸத்யம், ஞானம், அனந்தம் ஆகியவையே பிரம்மம்' என்பது அவர் விளக்கம். ராமானுஜருக்கு இந்தப் பொருள் திருப்தி தரவில்லை. 'ஸத்யம், ஞானம், அனந்தம் ஆகிய குணங்களை உடைய பிரம்மம்' என்று அவர், யாதவர் பொருள் விளக்கத்தை மறுத்துக் கூறினார்.

ஒரு மலருக்கு செம்மை, மென்மை, மணம் என்ற குணங்கள் பல இருக்கலாம். இவை ஒன்றுக்கொன்று முரண்பாடு அன்று. அதுபோல, ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற பல்வேறு பண்பு டைய பிரம்மம் என்று சொல்வதில் மாறுபாடு ஒன்றுமில்லை என்பது அவர் வாதம். குருவுக்குச் சிஷ்யன் மீது கோபம் ஏற்பட்டது. தம்மிடம் பாடம் கேட்க விருப்பமில்லாவிட்டால் வேறிடம் செல்லலாம் என்று அவர் கூறினார். ராமானுஜர் இந்த வாக்குவாதத்தை மேலும் வளர்க்க விரும்பவில்லை. தம் கருத்தைச் சொல்லிவிட்ட திருப்தியுடன், தம் செய்கைக்கு வருந்தினார்.

மற்றொரு சமயம், ராமானுஜர் யாதவருக்கு எண்ணெய்த் தேய்க்கும்போது, குரு பாடம் சொல்லிவந்தார். சாந்தோக்கிய உபநிஷதம் பாடம். 'தஸ்ய யதாகப்யாஸம் புண்டரீக

மேவமக்ஷிணி' என்ற உவமையை விளக்கும்போது, 'பிரம்மனின் கண்கள் குரங்கின் ஆசனம்போல் சிவந்திருந்தன' என்று பொருள் கூறினார். இந்தப் பொருள் கேட்டு திடுக்கிட்ட ராமானுஜரின் கண்களிலிருந்து நீர் பெருகி, குருவின் தொடையைச் சுட்டது. யாதவர் அவரைப் பார்த்து, 'என்ன துக்கம்?' என்று கேட்டார். ராமானுஜர், குரு கூறிய விளக்கம் தவறானது என்று கூறினார். 'இறைவரின் கண்கள் காலையில் மலரும் தாமரை மலர்போல் இருந்தன என்பது தான் இதன் பொருள்' என்றார் அவர்.

ராமானுஜர் இவ்வாறு அடிக்கடி குறுக்கிடுவதைக் கண்ட யாதவருக்கு அவர்மீது மிகுந்த கோபமேற்பட்டது. அத்வை தத்துக்கு அவரால் ஆபத்து ஏற்படலாமென்றுகூட யாதவர் அப்பொழுதே பயப்பட்டதாகப் பரம்பரைச் செய்திகள் கூறு கின்றன. தம் கொள்கையிலிருந்த உறுதி யாதவரை, ராமானுஜ ரைக் கொன்றுவிட வேண்டுமென்ற அளவுக்குத் தூண்டியது. அவர் தம்முடைய அந்தரங்கமான சில சிஷ்யர்களோடு கலந்தாலோசித்து வடநாட்டுக்கு யாத்திரை மேற்கொள்ள எண்ணினார். ராமானுஜரைக் கங்கையாற்றில் தள்ளிவிட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

இந்தச் சதித் திட்டத்தை கேள்விப்பட்ட கோவிந்தர், ராமானுஜ ருடைய சிறிய தாயாரின் மகன்-தாமும் இந்த யாத்திரைக் கோஷ்டியுடன் செல்லத் தீர்மானித்தார். உரிய காலத்தில் ராமானுஜருக்கு சதித் திட்டம் பற்றிச் சொல்ல வேண்டு மென்பதே அவர் எண்ணம்.

யாத்திரீகர்கள் ஒரு நல்ல நாளில் புறப்பட்டு விந்திய மலைச் சாரலை அடைந்தார்கள். இயற்கையில் இறைவனைக் கண்டு அக்காட்சியில் மூழ்கித் திளைத்தார் ராமானுஜர். இறைவனை புவன சுந்தரராகக் கண்டு அனுபவித்தார்.

அங்கு அவர்கள் சில நாட்கள் தங்கினார்கள். ஒரு நாள் விடியற் காலையில் அவர் பொய்கையில் நீராடச் சென்றபோது, கோவிந்தர் பின்தொடர்ந்து அவர் முதுகைத் தொட்டார்.

அந்நேரத்தில் கோவிந்தரை எதிர்பார்க்காத ராமானுஜர் கவலை தோய்ந்த முகத்துடன் தம் ஒன்றுவிட்ட சகோதரர் நிற்கக் கண்டு ஆச்சரியமடைந்தார். கோவிந்தர், ராமானுஜருக்கு அவரை எதிர்நோக்கியிருந்த ஆபத்தை பற்றிக் கூறினார். இதைக் கேட்ட ராமானுஜர் அதிர்ச்சினார். தம்மைக் கொல்லும் அளவுக்குத் தம்முடைய குரு வெறுப்பை வளர்த்திருக்கிறார் என்றறிருந்ததும் அவர் உள்ளத்தில் வேதனை சூழ்ந்தது. தம்மைக் கொன்ற பாவத்துக்கு அவரை ஆளாக்கக் கூடாதென்று எண்ணி அவர் காஞ்சிக்குத் திரும்பிவிடத் தீர்மானித்தார். கோவிந்தரிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார்.

காட்டிலே அவருக்கு வழி தெரியவில்லை. இறைவன் மீது பாரத்தைப் போட்டுவிட்டு நடந்தார்.

எவ்வளவு நேரம் நடந்தாரென்று அவருக்கே தெரியாது. பசியும், களைப்பும் அவரை மயக்கத்திலாழ்த்தின.

கண்களை விழித்துப் பார்த்தபோது ஒரு வேடனும் அவன் மனைவியும் அருகிலிருக்கக் கண்டார். வேடன், நெடிய உருவம். பயங்கரமான தோற்றம். ஆனால், கண்களில் கருணையின் பிரகாசம் குடிகொண்டிருந்தது. வேடனுடைய மனைவி அன்பின் வடிவமாக இருந்தாள். தாம் வழி தவறிவிட்டதாக அவர்களிடம் கூறினார் ராமானுஜர். வேடன் தானும் தம் மனைவியும் ராமேஸ்வரம் செல்வதாகவும் ராமானுஜரைக் காஞ்சிவரை அழைத்துச் செல்வதாகவும் வாக்களித்தான். ராமானுஜர் அவர்களுடன் புறப்பட்டார்.

பகலெல்லாம் நடந்த அவர்கள் ஓர் இடத்தில் இரவில் தங்கினார்கள். வேடனும் அவர் மனைவியும் ஒருபுறமிருக்க ராமானுஜர் வேறுபுறமிருந்து சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். வேடன் மனைவி தனக்குக் குடிக்க நீர் வேண்டுமென்று கணவனை வேண்டினாள். அருகில் ஒரு கிணறு இருப்பது தனக்குத் தெரியுமென்றும், ஆனால் இரவில் அதைக் கண்டு பிடிப்பது கடினமென்றும் வேடன் சொல்லிக் கொண்டு

இருந்தான். பொழுது விடிந்ததும் வேடன் மனைவிக்கு நீரைக் கொண்டுவந்து தருவதென்று ராமானுஜர் தீர்மானித்தார்.

அடுத்த நாள் காலை கிணற்றடியைத் தேடிக் கண்டுபிடித்து நீரைக் கொண்டு வந்தார் ராமானுஜர். ஆனால்... ஆனால்... வேடனும் அவன் மனைவியும் அங்கு இல்லை! காஞ்சியின் எல்லையில் தாம் இருப்பதை அப்போதுதான் உணர்ந்தார் ராமானுஜர்! அந்தத் திவ்யத் தம்பதிகள் யார்?!

இறைவன் மீது பொறுப்பைச் சுமத்திவிட்டு அவன் பாதங்களே நமக்கு உறுதுணையென்ற சரணாகதித் தத்துவத்தை விரித்துக் கூறப்போகிற ராமானுஜர் இவர்கள் யார் என்று தெரிந்து கொண்டார்!

## அந்த மூன்று விரல்கள்



மகனை இவ்வளவு சீக்கிர மாக எதிர்பார்க்கவில்லை காந்திமதி. அவர் தனியாகத் திரும்பியிருந்த செய்தி தாய்க்குக் கவலை அளித் தது. ராமானுஜர் எல்லா வற்றையும் விளக்கிக் கூறி விட்டு வெளியே சொல்லக் கூடாது என்று வாக்குறுதி யும் பெற்றுக்கொண்டார். குருவின் பெயருக்கு அப கீர்த்தி ஏற்படுவதை அவர் விரும்பவில்லை.

அவருடைய சிறிய தாயார் ஸ்ரீதேவி வந்து, தம்முடைய மகன்தான் ராமானுஜர் உயிரைக் காப்பாற்றினா ரென்று அறிந்து மகிழ்ந்தார்.

மூன்று மாதங்களுக்குப் பிறகு யாதவப் பிரகாசர் காஞ்சிக்குத் திரும்பினார். சிஷ்யன் ஏற்கெனவே திரும் பிவிட்ட செய்தி அவருக்கு அதிர்ச்சியைத் தந்தது. ராமானுஜரைக் கொடிய மிரு கங்கள் காட்டில் தாக்கி யிருக்கக்கூடும் என்ற அவரு டைய நம்பிக்கை வீணாகப் போய்விட்டது. ராமானு ஜருக்கு எல்லா விஷயங் களும் தெரிந்திருக்கலாம் என்று தோன்றியவுடன், அவருடைய குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுத்தது.

ராமானுஜருக்குச் செய்தி அனுப்பினார்; அவர் விரும்பினால் மீண்டும் தம்மிடம் படிக்கலாமென்றும் கூறினார். யாதவரை வந்து பார்த்த ராமானுஜர் முக பாவத்திலிருந்து அவரால் ஒன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை. எப்பொழுதும்போல் புன்னகை ததும்பும் முகம். ராமானுஜர் யாதவர் வகுப்பில் மீண்டும் சேர்ந்து படிக்க ஒப்புக் கொண்டார்.

கோவிந்தர் அந்தக் கோஷ்டியுடன் திரும்பவில்லை என்பது ராமானுஜருக்கு வேதனையளித்தது. கங்கைக் கரையில் கண்ட ஒரு லிங்கத்தை காளஹஸ்தியில் பிரதிஷ்டை செய்து கோவிந்தர் அங்கு தங்கிவிட்டார். லிங்கம் கிடைத்ததை ஒரு நல்ல பேறாக எண்ணி, அவர் அத்வைத பிரசாரத்துக்காகத் தம் வாழ்க்கையை அர்ப்பணித்தார்.

யாதவருடைய வகுப்புக்களில் ராமானுஜரால் முன்பு போலவே கவனம் செலுத்த முடியவில்லை. தமக்கும் தம் குருவுக்கும் இடையே நீண்ட சுவர் எழும்பிவிட்டதை அவர் உணர்ந்தார். மீண்டும் மீண்டும் இருவருக்கும் கருத்து வேறு பாடுகள் எழத் தொடங்கின. ராமானுஜர் தம் கருத்தைத் துணிந்து கூறத் தொடங்கியது குருவின் கோபத்தை வளர்த்தது.

ஒரு சமயம் காஞ்சிக்கு அருகிலிருந்த ஒரு குறுநிலத் தலைவன் மகளுக்கு 'பிரம்ம ராக்ஷஸ்' பிடித்திருப்பதாகச் செய்தி வந்தது.

யாதவரைக் கூப்பிட்டனுப்பி, மந்திர வலிமையால் அது நீங்கும்படி செய்யவேண்டும் என்று அரசன் கேட்டுக்கொண் டான். ராமானுஜரும் உடன் சென்றார். யாதவர் மந்திரத்துக்கு அது கட்டுப்படவில்லை. ராமானுஜர் 'நம்பிக்கை வைத்தியம்' செய்ய, அந்தத் 'துர்தேவதை' நீங்கியது. குருவை சிஷ்யன் மிஞ்சிவிட்டாரென்று அனைவரும் பாராட்டினார்கள். யாத வருக்கு ராமானுஜர் மீது மிகுந்த பொறாமை உண்டாகியது. இனி தம்மிடம் படிக்க வரவேண்டாமென்று அவர் ராமானு ஜரிடம் கூறிவிட்டார்.

ராமானுஜர் திருக்கச்சி நம்பியைச் சந்தித்து, யாதவர் தம்மைப் படிக்க வரவேண்டாம் என்று கூறிவிட்டதை எடுத்துச்

சொன்னார். மேலும் தம் கல்வியை திருக்கச்சி நம்பியிடம் தொடர விரும்புவதாகவும் கூறினார். இது அவருக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்தது. திருமஞ்சனத்துக்குத் தேவையான தூய்மையான நீரைத் தினந்தோறும் கொண்டுவருவதே தாம் அளிக்கப்போகும் கல்விப் பயிற்சிக்குக் கட்டணம் என்று கூறி, ராமானுஜரைக் கோயில் காரியத்தில் ஈடுபடுத்திப் பாடம் நடத்திவந்தார். வைஷ்ணவத்தின் எதிர்காலம், ஆளவந் தாருக்குப் பிறகு ராமானுஜரைப் பொறுத்துதான் இருக்கிறது என்று அவர் உறுதியாக நம்பினார். ராமானுஜரின் கம்பீரமான தோற்றமும், கூர்மையான அறிவும், ஆழமான கல்வியும் அவர் நம்பிக்கைக்குக் காரணமாக இருந்தன.

நாதமுனிகளின் பேரரான ஆளவந்தார் ராமானுஜரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். ஒரு சமயம் அவர் காஞ்சிக்குச் சென்றிருந்தார். கோயிலில் அவர் ஸ்வாமி தரிசனம் செய்து விட்டுத் திரும்பும்போது, சற்றுத் தொலைவில் சென்று கொண்டிருந்த ராமானுஜரைச் சுட்டிக் காட்டி, 'யாதவரின் அத்வைதத்துடன் மாறுபடும் அவர் சிஷ்யர் இவர்' என்று ஆளவந்தார் கோஷ்டியில் ஒருவர் சொன்னார். ராமானுஜரை உற்றுக் கவனித்தார் ஆளவந்தார். நெடிய உருவம், தீட்சண்யமான நோக்கு, ஆழ்ந்த சிந்தனையைக் காட்டும் விசாலமான நெற்றி... இவரே வைஷ்ணவத்தைத் தம் அகன்ற தோள்களில் தாங்கப்போகும் வருங்காலத் தலைவர் என்று அந்தத் தீர்க்கதரிசிக்குப் பட்டது. இதற்குக் காஞ்சி வரதருடைய அருளை வேண்டி நின்றார் ஆளவந்தார்.

தம்முடைய எண்ணம் நிறைவேறப் போகும் காலம் வந்துவிட்டதென்று அறிந்தவுடன் ஆளவந்தாருக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. ராமானுஜர் யாதவப் பிரகாசரை விட்டு நீங்கி திருக்கச்சி நம்பியிடம் மாணவராக இருந்து வருகிறாரென்ற செய்தி, வைஷ்ணவத்துக்கு நல்லதென்று அவர் நினைத்தார். இந்நிலையில் அவர் வயோதிகத்தினால் மிகவும் தளர்ச்சி யுற்றார். சிஷ்யர்களை அழைத்து அவர் கூறத் தொடங்கினார்:

'இறைவனே நம் வாழ்க்கை. இறைவன் மீது பூரணமான நம்பிக்கை வைத்து, அவன் பாதங்களே தனக்கு அடைக்கலம் என்று இருப்பவன் உண்மையான பக்தன். கடவுள் மீது நம்பிக்கை இல்லாவிட்டால், ஒருவனுக்குத் தன்மீதே நம்பிக்கை இல்லையென்று அர்த்தம். நம் ஞானத்தின் உரு வகம் இறைவன். நாம் அவனிடம் உள்ளோம். அவன் நம்மிடை உள்ளான். மனித சமுதாயத்துக்குச் சேவை செய்யவே இறைவன் நம்மைப் படைத்துள்ளான்!' இவ்வாறு கூறிவிட்டு அவர் கோயிலுக்குள் சென்றார். திருவரங்கப் பெருமானின் சந்நிதானத்தில் சிறிது நேரம் அமைதியாக நின்றார். பிறகு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். 'நான் தெரிந்தோ தெரியாமலோ இதுவரை செய்திருக்கக்கூடிய பிழைகளைப் பொறுத்தருள வேண்டும்' என்று இறைஞ்சி னார். அருகிலிருந்த பக்தர்கள் அழுதார்கள். ஆளவந்தார் தம்முடைய முடிவு மிக அருகிலிருப்பதாகக் கூறினார்.

அவர் தம்முடைய பிரதம சீடராகிய பெரியநம்பியை அழைத்தார். 'நீ போய் ராமானுஜரை அழைத்து வரவேண்டும்' என்றார். அக்கட்டளையை ஏற்றுக்கொண்ட சீடர் உடனே புறப்பட்டார்.

காஞ்சிக்கு வந்து சேர்ந்த பெரியநம்பி, திருக்கச்சி நம்பியைச் சந்தித்து விஷயத்தைச் சொன்னார். திருக்கச்சி நம்பிக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. 'ராமானுஜரே ஆளவந்தாருக்குப் பிறகு பட்டம் ஏறத் தகுதியுடையவர்' என்றார் அவர்.

அடுத்த நாள் காலை நீராடிவிட்டு, பெரியநம்பி, ஆளவந்தார் இயற்றியுள்ள தோத்திர ரத்தினத்தை இசைத்துக் கொண்டிருந் தார். திருமஞ்சனத்துக்கு நீர் எடுத்துச் சென்ற ராமானுஜர் காதுகளில் இந்த இசை பாய்ந்தது. அவர் மெய்மறந்து அப்படியே நின்றார். ராமானுஜர், இசையில் மயங்கி நிற்பதைக் கண்டார் பெரியநம்பி. தலைமைப் பதவி ஏற்பதற்கான எல்லாத் தகுதிகளும் அவரிடம் இருக்கக் கண்டார் ஆளவந்தார் சீடர்.

இசை முடிந்தவுடன், ராமானுஜர் அவரை நோக்கி வந்தார். ‘இது யார் இயற்றிய பாடல்?’ என்று கேட்டார். ஆளவந்தார் இயற்றிய பாடல் என்று அறிந்ததும் அவருக்கு ஆனந்தம் மிகுந்தது. ‘இந்தத் தெய்வத் திருமனிதரைக் காணும் நாள் எந்நாளோ?’ என்றார் ராமானுஜர். அவருக்கு உடல்நலம் சரியில்லை என்றும், அவரைக் காண விருப்பம் இருந்தால் உடனே புறப்பட்டு வரும்படியும் கூறினார் பெரியநம்பி. ராமானுஜர் அவருடன் விரைந்தார்.

திருவரங்கத்து எல்லையை அடைந்தவுடன், அங்குப் பல இடங்களில் மக்கள் கூட்டம் கூட்டமாகச் சந்தித்துப் பேசுவதை இருவரும் பார்த்தார்கள். பெரியநம்பி விசாரித்தார். அவர்கள் கூறிய செய்தி இருவருக்கும் பேரிடியாக இருந்தது.

ஆளவந்தார் இறைவனடி அடைந்துவிட்டார். விதி தம்மை வஞ்சித்துவிட்டதென்று புலம்பினார் ராமானுஜர். ஆளவந்தாரைக் காண அவர் காஞ்சியினின்றும் வந்தார்; ஆனால் அவரால் அந்தப் பெரியவரின் திருமேனியைத்தான் காண முடிந்தது.

திருமேனியைச் சுற்றித் திருவரங்கத்திலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனைவரும் குழுமியிருந்தனர். ராமானுஜர், ஆளவந்தாரின் வலக்கையில் மூன்று விரல்கள் முடங்கியிருக்கக் கண்டார். அதுபற்றி அங்குள்ளவர்களை விசாரித்த போது ஒருவருக்கும் சரியான காரணம் கூற இயலவில்லை. ‘ஆளவந்தாருக்கு ஏதேனும் மனக்குறை உண்டோ?’ என்று கேட்டார் ராமானுஜர். ஒரு சிஷ்யர் கூறினார்: ‘வியாச சூத்திரத்துக்கு விசிஷ்டாத்வைத வியாக்கியானம் செய்ய வேண்டுமென்று அவர் விரும்பினார். அது முடியாமல் போய் விட்டது. பராசரருடைய திருநாமமும், திருவாய்மொழியை அருளிச் செய்த நம்மாழ்வாருடைய திருநாமமும் விளங்கும் படியாக, அப்பெயர்களை இரண்டு பிள்ளைகளுக்குச் சாத்தி, அவர்களுடைய கல்வி அறிவுக்கான நிர்வாகத்துக்கும் பொறுப் பேற்க விரும்பினார். இம்மூன்றும் நடைபெறாமலே போய் விட்டன.’

ராமானுஜர் இதைக் கேட்டதும், மனத்திலேற்பட்ட ஓர் உறுதியுடன் சொன்னார்: 'இறைவன் திருவருள் கிடைக்கு மானால் இம்மூன்றையும் நான் நிறைவேற்றுவேன்!' அருகிலிருந்த யாவருக்கும் ராமானுஜர் இதைச் செய்து முடிக்கக் கூடியவர் என்றுதான் தோன்றியது. ஆள வந்தாருக்குப் பிறகு வைஷ்ணவ இயக்கத்துக்குத் தலைமை தாங்கும் தகுதியுடையவர் ராமானுஜரே என்று அங்குள்ள பெரியோர்கள் கருதினர்.

ஆளவந்தாரின் சாமக் கிரியைகள் முடிந்தபிறகு காஞ்சிக்குத் திரும்பினார் ராமானுஜர்.

பிரம்ம சூத்திரத்துக்குப் பாஷ்யம் எழுத வேண்டுமென்றால், அதற்குத் தம்மைச் சிறந்த முறையில் தயார் செய்துகொள்ள வேண்டுமென்ற எண்ணம் விஸ்வருபமெடுத்தது. சங்கர ருடைய அத்வைதத்தோடு மாறுபட வேண்டுமென்றால், அவருக்கிணையான ஞானத்தைப் பெற்றிருக்க வேண்டும். ராமானுஜர் இடையறாது கற்கத் தொடங்கினார்.

## மனைவியைத் துறந்தார்; துறவறம் கொண்டார்



ராமானுஜர் திருக்கச்சி நம்பியைத் தமக்குச் சில உண்மைகளைப் போதிக்குமாறு வேண்டினார். அவருடைய சில சந்தேகங்களைத் தீர்க்கும் முறையில் ஆறு உபதேசங்கள் செய்தார் திருக்கச்சி நம்பி. இவை ஆறு வார்த்தைகள் என்று புகழ் பெற்றன. இறைவனே அருளிச் செய்ததுபோல் அவை அமைந்துள்ளன.

அவை வருமாறு : 1. முடிவான உண்மை நானே; 2. நம்முடைய மதம் வேதம்; 3. ப்ரபத்தியே உபாயம்; 4.அந்திமஸ்ம்ருதி அவசியமன்று; 5.தேகத்தினின்றும் விடுதலையே மோட்சம்; 6. பெரியநம்பியை ஆசாரியானாக ஏற்றுக்கொள்.

திருக்கச்சி நம்பி மூலம் இறைவன் சொன்ன ஆறு வார்த்தைகளைக் கேட்டு மகிழ்ந்தார் ராமானுஜர். திருவரங்கத்திலுள்ள பெரிய நம்பியைக் குருவாக ஏற்றுக் கொள்ளும்படி இறைவன் இட்ட கட்டளையை மேற்கொண்டு அவரைச் சந்திக்கக் காஞ்சியிலிருந்து புறப்பட்டார்.

இந்தச் சமயத்தில் திருவரங்கத்திலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஆளவந்தாரின் விசேஷ கடாக்ஷம் பெற்ற இளையாழ்வாராகிய ராமானுஜரை அழைத்துக்கொண்டு வரவேண்டுமென்று பெரிய நம்பியிடம் விண்ணப்பித்தனர்.

பெரியநம்பியும் மனைவியுடன் புறப்பட்டு மதுராந்தகத்தை அடைந்தார். அங்கு எழுந்தருளியிருந்த ஏரிகாத்த பெருமாளின் சந்நிதியில் அவர் இளைப்பாறியிருந்த வேளையில், ராமானுஜரும் அங்கு வந்தார். பெரியநம்பியைச் சந்தித்தது பேரருளாளன் கருணையே என்று மகிழ்ந்த ராமானுஜர் அவர் பாதங்களில் விழுந்து சிஷ்யனாக ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினார்.

பெரியநம்பி அவரை மகிழ மரத்தடிக்கு அழைத்துச் சென்று பஞ்ச ஸமஸ்காரம் செய்தார். ஆளவந்தாரின் கருணை ராமானுஜருக்குத் தம் மூலம் பிரசாதித்து அருளுகின்றது என்று கூறி சர்வமந்திர உபதேசத்தையும், த்வய மந்திரத்தையும் அவருக்கு உபதேசித்தார் பெரியநம்பி.

மந்திர ரத்தினத்தின் ரகஸ்யத்தைக் கேட்டு உய்ந்த ராமானுஜர், குருவையும், அவர் பத்தினியையும் காஞ்சிக்கு அழைத்தார். பெரியநம்பி அவர் வேண்டுகோளுக்கிணங்கிக் காஞ்சிக்குச் சென்று அவருடன் சில நாட்கள் தங்கினார். பெரியநம்பி அவருக்கு வியாச சூத்ரார்த்தத்தையும், திருவாய்மொழி யொழிந்த மூவாயிரங்களையும் கற்பித்து வந்தார்.

ராமானுஜர் தன் மனைவி தஞ்சம்மாவுடன் வேறுபாடு கொண்டு அவரைப் பிறந்தகம் அனுப்பியது இக்காலத்தில் தான். ராமானுஜருக்குப் பதினாறு வயதில் திருமணம் நடந்தேறியது. அவருக்கும் அவர் மனைவிக்கும் சிறிதளவு மன ஒற்றுமை இல்லை என்று தெரிகிறது. கணவருடைய வாழ்க்கை முறை தஞ்சம்மாவுக்கு உடன்பாடில்லை. இதைக் குறித்து மூன்று கதைகள் கூறப்படுகின்றன.

ஒரு சமயம் ராமானுஜர் திருக்கச்சி நம்பியைத் தம் மாளிகைக்கு விருந்துண்ண அழைத்திருந்தார். காலை அனுஷ்டானங்களை

முடித்துக்கொண்டு, நம்பியை அழைத்துவரப் புறப்பட்டார் இளையாழ்வார். ஆனால், திருக்கச்சி நம்பி மற்றொரு வழியாக வந்து ராமானுஜர் வீட்டையடைந்தார். கோயிலில் அவசரக் காரியம் இருந்தபடியால் உணவு உடனே படைக்கும்படி ராமானுஜர் மனைவியை வேண்டினார். அவர் உண்டு சென்ற பிறகு, அவர் சாப்பிட்ட இலையைக் கோலால் எடுத்தெறிந்து, உட்கார்ந்த இடத்தைச் சாணம் தெளித்துச் சுத்தம் செய்து, தாமும் நீராடிவிட்டுக் கணவன் வருகைக்குக் காத்திருந்தார் தஞ்சம்மா. ராமானுஜர் வீட்டுக்குத் திரும்பியவுடன் நடந்ததை அறிந்து கோபம் கொண்டார்.

இன்னொரு சமயம், ஸ்ரீ வைஷ்ணவர் பசித்திருக்க, அவருக்கு உணவு இடும்படி மனைவியிடம் சொன்னார் ராமானுஜர். உணவு இல்லை என்றார் தஞ்சம்மா. அவர் உள்ளே சென்று பார்த்தபோது உணவு மறைத்து வைக்கப்பட்டிருப்பதை அறிந்தார். எல்லை மீறிய சினத்தை அடக்கி வைத்துக் கொண்டார் ராமானுஜர்.

தஞ்சம்மா செய்த மூன்றாவது பிழைதான், இருவருக்கும் நிரந்தரமான பிரிவு ஏற்படக் காரணமாயிற்று. பெரியநம்பி தம் மனைவியுடன் அவர் வீட்டில் தங்கியிருந்தபோது, ஒருநாள் ராமானுஜர் ஸ்ரீபெரும்புதூர் சென்றிருந்தார். அச்சமயம், ஒரு தோண்டியின் காரணமாகக் கிணற்றங்கரையில் தஞ்சம்மா வுக்கும் பெரியநம்பியின் மனைவிக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டது. ராமானுஜர் மனைவி கொஞ்சம் கடுமையாகவே பேசிவிட்டார். இதையறிந்த பெரியநம்பி, தன் மனைவியைச் சண்டையிட்டதற்குக் கோபித்து, அவருடன் திருவரங்கம் சென்றுவிட்டார்.

ஸ்ரீபெரும்புதூரிலிருந்து வந்த ராமானுஜர் நடந்ததையறிந்து, மனைவியைப் பிறந்தகம் செல்லும்படி கட்டளையிட்டார். இதற்குப் பிறகு, ராமானுஜர் பேரருளாளன் சந்நிதியில் துறவறம் மேற்கொண்டார். அவருக்கு யதிராஜன் என்ற திருநாமம் ஏற்பட்டது.

## அதிசயப் பரிசு; அற்புத இயக்கம்!



தம்மைச் சுற்றி உற்சாகமும், நம்பிக்கையும் கொண்ட ஒரு சிஷ்ய பரம்பரையை உருவாக்க வேண்டியதன் அவசியத்தை உணர்ந்தார் ராமானுஜர். மக்களிடையே இச்சமயம் பரவ வேண்டுமானால் தீவிரமான பிரசாரம் தேவை. இதற்கு ஓர் இயக்கம் வேண்டும். ஆகவே, ராமானுஜர் இந்தப் பணியில் பலரைச் செயல்படுத்துவதில் முனைந்தார்.

அவருக்குத் தம் சிற்றன்னையின் மைந்தர் கோவிந்தன் நினைவு வந்தது. அவர் காளஹஸ்தியில் தங்கி அத்வைத மதத்தைத் தழுவியுள்ளார் என்பது அவர் மனத்துக்குச் சிறிது வேதனை தந்தது. தம்முடைய தாய்மாமன் திருமலை நம்பிக்கு அவர் செய்தி அனுப்பி, கோவிந்தரை வைஷ்ணவ மதத்துக்குத் திருப்புவது அவர் பொறுப்பு என்று உணர்த்தினார். கோவிந்தரைச் சந்தித்த திருமலை நம்பி நாட்கணக்கில் அவருடன் வாதாடினார். இறுதியில் மாமன் வென்றார். கோவிந்தர் காஞ்சிக்குத் திரும்பி ராமானுஜரின் சிஷ்யரானார்.

கோவிந்தப் பெருமாள் என்று அழைக்கப்பெற்றார் கோவிந்தர்.

கோவிந்தரை ஆட்கொண்ட ராமானுஜர் கவனம் முதலியாண்டான் மீது சென்றது. முதலியாண்டான், ராமானுஜருடைய சகோதரியின் மகன். அவர் மாமனின் கட்டளைப்படி காஞ்சிக்கு வந்து சிஷ்யரானார். அவருக்கு ராமானுஜர், வேத வேதாந்தங்களையும் இன்னும் பிற வேதங்களின் அங்கங்களையும் பாடம் செய்வித்தார். ராமானுஜருடன் இறுதிவரை இருந்த சிஷ்யர்களில், உறவுமுறையைச் சார்ந்தவர் இவர் ஒருவர்தாம்.

காஞ்சியில் ஒரு செல்வந்தர் இருந்தார். அவர் பெயர் கூரேசர். நல்ல ஞானமும், ஒழுக்கமும் நிறைந்தவர் இவர். அவர் வீடு ஏழைகளுக்கு எப்பொழுதும் திறந்திருக்கும். ராமானுஜர் புகழ் கேட்டு அவரைச் சந்திக்கச் சென்ற கூரேசர், அவர் சிஷ்யரானார். அன்று முதல் தம்முடைய செல்வத்தை எல்லாம் அனைவருக்கும் பகிர்ந்தளிக்கத் தொடங்கி முடிந்தவுடன், மனைவியை அழைத்துக்கொண்டு ராமானுஜ மடம் நோக்கிப் புறப்பட்டார். அவர் மனைவியின் பெயர் ஆண்டாள். வேதங்களைக் கற்றுணர்ந்த அம்மையார். இருவரும் காட்டு வழியே வரும்போது, ஆண்டாள் கொஞ்சம் பயப்பட்டாள். 'மடியில் கனமில்லை. எல்லாம் துறந்தாகிவிட்டது. எதற்குப் பயப்பட வேண்டும்?' என்றார் கூரேசர். ஆண்டாள், தங்கத்தினாலாகிய ஒரு பாத்திரம் மட்டும், கூரேசர் உபயோகத்துக்காக எடுத்து வருவதாகக் கூறினார். இதுகேட்ட கூரேசர் கோபத்துடன் அந்தப் பாத்திரத்தைப் பிடுங்கித் தூர எறிந்தார். 'பயம் இனி ஒழிந்தது' என்றார், முற்றும் துறந்த அப்பெரியார்.

கூரேசரைக் கண்ட ராமானுஜர் அவரைத் தழுவிக் கொண்டார். வைஷ்ணவத்தைப் பரப்ப அருந்துணை கிடைத்துவிட்டது என்று மனம் மகிழ்ந்தார்.

முதலியாண்டான் ராமானுஜரின் தண்டமெனவும், கூரேசன், அவருடைய பவித்ரமெனவும் அழைக்கப் பெறுவர்.

இந்த நேரத்தில்தான் யாதவ ப்ரகாசரும் ராமானுஜருடைய சிஷ்யராக மாறினார். இது யாராலும் எதிர்பார்க்க முடியாத சம்பவம். யாதவருக்கு வயது ஆக ஆக மன அமைதி இல்லாமல் போய்விட்டது. அவருடைய தத்துவம் அவருக்கு வேண்டிய சாந்தியைத் தரவில்லை. யாதவருடைய தாயார் ராமானுஜருடைய கொள்கைகளில் ஈடுபட்டு மகனையும் அப்பெரியாரைச் சென்று பார்க்கும்படி தூண்டினார்.

ஆனால் சிஷ்யனைப் போய் பார்க்க குருவுக்கு விருப்ப மில்லை. திருக்கச்சி நம்பியுடன் கலந்தாலோசித்தார். அவரும் அதே யோசனையைத்தான் கூறினார். யாதவர் ராமானுஜரைச் சென்று சந்தித்தார். அத்வைத செம்மலைக் கண்ட ராமானு ஜருக்கு மிகுந்த மகிழ்ச்சி. குருவே தம்மை நாடி வந்தது, விசிஷ்டாத்வைதத்தின் வெற்றி என்று அவர் நினைத்தார். யாதவருக்கு கோவிந்தஜீயர் என்ற பெயர் சூட்டப்பட்டது. அவர் அந்தத்தள்ளாத வயதில், 'யதிதர்ம சமுச்சியம்' என்ற நூல் இயற்றினார்.

யாதவர் ராமானுஜருடைய சிஷ்யரானார் என்ற செய்தி வைஷ்ணவ உலகத்தில் ஒரு பரபரப்பை உண்டாக்கியது. திருவரங்கத்திலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் மிகவும் உற்சாக மடைந்தனர். ராமானுஜர் திருவரங்கத்தில் இருந்து வைஷ்ணவ இயக்கத்தைத் தலைமை தாங்கி நடத்த வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள். காஞ்சியிலிருந்து அவரை அழைத்து வருவது எளிதான காரியமல்ல என்பது அவர் களுக்குத் தெரியும். காஞ்சியிலுள்ள வைஷ்ணவர்கள் அவரை அனுப்ப சம்மதிக்க மாட்டார்கள் என்பதும் அவர்கள் உணர்ந்ததுதான். ஆகவே அவர்கள் ஒரு திட்டம் வகுத்தார்கள்.

திருவரங்கப் பெருமாளரையர், ஆளவந்தார் சீடர்களில் ஒருவர். அவர் மிகப் பெரிய இசை வல்லுநர். அவர் காஞ்சிக்குச் சென்று இசைமாரி பொழிந்தால், இசைக்காக எதையும் தரவல்ல வரதராஜப் பெருமாள் ராமானுஜரைத் திருவரங்கத் துக்குத் தந்துவிடுவார் என்று அவர்கள் நம்பினார்கள்.

பெருமாளரையர் காஞ்சியை அடைந்ததும் கோயிலுக்குச் சென்றார். அங்கு ராமானுஜரும் இன்னும் பலரும் குழுமி யிருந்தனர். பெருமாளரையர் திவ்விய ப்ரபந்தத்தில் இருந்து சில பாடல்களைப் பாடத் தொடங்கினார். இசையின் உருக்கமும் அவர் குரலின் கம்பீரம் கலந்த இனிமையும் அனைவரையும் ஆட்கொண்டன. மெய்மறந்து கேட்டனர். வரதர், அர்ச்சகர் மூலம் பெருமாளரையருக்குத் தேவையான பரிசைக் கூறும்படி கட்டளையிட்டார். திருவரங்கத்திலிருந்து வந்த இசை விற்பன்னர், தமக்கு வேண்டிய பரிசைச் சொன் னார். அனைவரும் திடுக்கிட்டு நின்றனர். அவர் வேண்டி நின்ற பரிசு, ராமானுஜர். இறைவன் தருவதாகச் சொன்ன பிறகு, வாக்குத் தவறக்கூடாது. காஞ்சியிலுள்ள பக்தர்கள், ராமானுஜர் திருவரங்கம் செல்ல சம்மதிக்கும்படி ஆயிற்று.

திருவரங்கத்தில் ராமானுஜரை மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றனர். வேதமந்திரங்கள் முழங்கின. அதை ஒரு பெரிய வைபவமாகக் கொண்டாடினர்.

திருவரங்கத்து எம்பெருமானைப் பற்றிய திவ்ய பிரபந்த வரிகள் பலவற்றை நினைவு கூர்ந்தார் ராமானுஜர். யோக நித்திரை செய்யும் அரங்கத் தண்ணலைக் கண்குளிரக் கண்டு எல்லையிலா ஆனந்தமடைந்தார். ஆளவந்தார் தம்மை ஆசீர்வாதம் செய்வது போலிருந்தது அவருக்கு. ஆள வந்தாரின் கடாக்ஷம் அவருக்குப் பரிபூரணமாகக் கிட்டி விட்டது.

இப்பொழுது, நல்லதொரு இயக்கத்தை உருவாக்க வேண்டு மென்ற அவசியத்தை அவர் உணர்ந்தார். இதற்குக் கோயிலை இந்த இயக்கத்தின் நடுநாயகமாகக் கொள்வதுதான் சிறந்த தென்று அவருக்குப் பட்டது. கோயில் விவகாரத்தைக் கவனிக்கத் தொடங்கினார்.

கோயில் சுவர்கள் புதுப்பிக்கப்படாமல் பாழடைந்து கிடந்தன. அவற்றைச் செப்பனிட்டுத் திருத்தினார். இறைவன் எங்கும் நிறைந்தவன். இயற்கையே அவனது உடல். அது கண்ணுக்கு

விருந்தாக அமைந்தால்தான், அதை நோக்கும் பார்வையிலும் உற்சாகம் ஏற்படும். இது உள்ளத்திலும் பிரதிபலிக்கும். அகமும் புறமும் ஒன்றிய இம்மனநிலையில்தான் இறை உணர்வு உண்டாகும். ஆகவே கோயிலைச் சுற்றிப் பொழில் களை நிர்மாணித்தார் ராமானுஜர்.

ஒரு சமய இயக்கம் வெற்றிபெற வேண்டுமென்றால், பொது மக்களின் பரவலான ஆதரவை அது பெறவேண்டும். அதற்குத் திருவிழாக்கள் அவசியம். ஆகவே கோயிலில் பல திருவிழாக் களைக் கொண்டாட ஏற்பாடு செய்தார். நாட்டியம், இசை ஆகிய கலைகள் வளர்ந்தன. திவ்விய ப்ரபந்தத்தை ஒட்டிய ஒரு நாட்டிய-நாடகம் இவர் காலத்தில் ஏற்பட்டது.

அறிவாளிகளின் தத்துவ விசாரணையாக மட்டும் இயங்கி வந்த மதத்தை ஒரு பொதுஜன இயக்கமாக நடத்துவதற்கான முயற்சிகளை ராமானுஜர் மேற்கொண்டார். வைஷ்ணவ மதம் பெருவாரியான அளவில் மக்கள் ஆதரவைப் பெறத் தொடங்கியது.

## கோபுரத்தில் நின்று திருமந்திர முழக்கம்



பெரியநம்பியைச் சந்தித்தார் ராமானுஜர். தம் மனைவியின் செய்கை காரணமாகக் காஞ்சியை விட்டு அவர் புறப்பட நேர்ந்தமைக்கு வருந்தினார். என்ன நடந்ததென்பது பற்றித் தாம் மறந்துவிட்டதாகக் கூறினார் பெரியநம்பி. ராமானுஜர் மன்னிப்பு வேண்டும்படியாக எதுவுமே நடந்துவிடவில்லை என்று அவர் ஆறுதல் சொன்னார்.

பிறகு, திருக்கோஷ்டியூர் நம்பியிடம் சென்று த்வய மந்திரத்தின் இரகசியத்தைத் தெரிந்துகொள்ளும்படி கூறினார் பெரியநம்பி.

ராமானுஜர் திருக்கோஷ்டியூர் சென்றார். அங்கு தெருவில் கண்ட சிலரைத் திருக்கோஷ்டியூர் நம்பி வீடு எங்கு உள்ளது என்று வினவினார். அவர்கள் நம்பியின் குடிலைக் காட்டினார்கள். நம்பியின் பாதங்களில் விழுந்து த்வய மந்திரத்தின் ரகஸ்யார்த்தத்தைக் கூறும்படி கேட்டார் ராமானுஜர். இதைத் தெரிந்துகொள்ளுவதில் ராமானுஜருக்கு

எவ்வளவு ஆவல் இருக்கின்றது என்று அறிய விரும்பிய திருக்கோஷ்டியூர் நம்பி அவரைப் பிறகு வரும்படி கூறினார். இரண்டாம் தடவை அவர் சென்றபோதுகூட நம்பி அவருடன் சரியாக உரையாடவில்லை. ராமானுஜர் இவ்வாறாக அவரிடம் பதினெட்டுத் தடவைகள் சென்றார். ராமானுஜரின் உறுதி நம்பியைக் கவர்ந்தது. பின்பு ஒருநாள் திருக்கோஷ்டியூர் நம்பி ஒரு வைஷ்ணவரை ராமானுஜரைக் கூட்டிவரும்படி சொன்னார். இளையாழ்வார், கூரேசரையும், முதலி யாண்டாரையும் அழைத்துக்கொண்டு போனார். 'உம்மை உம்முடைய தெண்டம், பவித்திரம் ஆகியவற்றோடு மட்டும் தான் வரச் சொன்னேே தவிர இவர்களை ஏன் கூட்டி வந்தீர்?' என்றார் திருக்கோஷ்டியூர் நம்பி. 'இவர்கள்தாம் என் தெண்டம்; பவித்திரம்' என்று சாதுர்யமாகப் பதில் சொன்னார் ராமானுஜர்.

நம்பி இந்தப் பதிலைக் கேட்டு மகிழ்ந்து அவருக்கு த்வய மந்திரத்தின் ரகஸ்யார்த்தத்தைச் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினார்.

இந்த ரகஸ்யார்த்தத்தை ஒருவருக்கும் சொல்லக்கூடாது' என்று வாக்குறுதி பெற்றுக்கொண்டு பாடம் சொன்னார் நம்பி. திருமந்திரார்த்தத்தையும் சரமஸ்லோக அர்த்தத்தையும் பாடம் கேட்டார் ராமானுஜர். திருமந்திரத்தின் அர்த்தத்தை உணர்ந்தவர்களுக்கு நிச்சயமாக வீடுபேறு உண்டு என்று திருக் கோஷ்டியூர் நம்பி சொல்லக் கேட்டார் இளையாழ்வார். உலகில் துன்புறும் பிறவிகள் அனைத்துக்குமே வீடுபேறு கிட்ட வேண்டுமென்று விரும்பியது அவரது பரந்த உள்ளம். ஆகவே இதை உலகுக்கு உணர்த்த வேண்டுமென்று அவர் தீர்மானம் செய்தார்.

இவ்வாறு தெளிவுற பாடம் கேட்ட பிறகு, அவர் கோயில் கோபுரத்தின் மீது ஏறி ஊரிலுள்ள அனைவரையும் அழைத்தார். தெற்காழ்வான் திருவோலக்கத்திலிருந்து அவர் எல்லாரையும் கூப்பிட, அனைவரும் அங்கு கூடினர். ஆசிரியர் சொன்ன ரகஸ்யார்த்தங்களை வெளியிட்டார் ராமானுஜர்.

இதைக் கேள்வியுற்று கோபமடைந்த திருக்கோஷ்டியூர் நம்பி, ராமானுஜரை அழைத்துவரச் சொல்லி, 'ஒருவருக்கும் சொல்ல வேண்டாம் என்று சொல்லியிருக்க, அதை மறுத்த உமக்குப் பலன் ஏன்?' என்று கேட்டார். ராமானுஜர் அதற்கு, 'ஆசார்ய நியமனத்தை மறுத்த எனக்கு நரகமே பலன்' என்று 'அறிந்து செய்தல் அடுக்குமோ?' என்ற கேட்டருளினார் நம்பி. அதற்கு ராமானுஜர், 'அடியேன் ஒருவன்தான் நரகம் போவேன், ஆனால், பொருள் கேட்ட ஆத்ம கோடிகள் அனைத்துக்கும் வீடு பேறு கிட்டுமே' என்று புன்சிரிப்புடன் சொன்னார்.

திருக்கோஷ்டியூர் இப்பதிலைக் கேட்டுத் திகைத்தார். இப்படியும் ஒருவரோ என்று மகிழ்ந்து, தமக்கு அந்த உள்ளம் இல்லையே என்று நொந்து கொண்டார். 'இன்று முதல் இந்தத் தர்மம் (விசிஷ்டாத்வைதம்) ராமானுஜ ஸித்தாந்தம் எனப் படட்டும், உமக்கு 'எம்பெருமானார்' என்று பெயர் வழங் கட்டும்' என்று கூறி அவரைத் தழுவிக் கொண்டார்.

திருக்கோஷ்டியூர் நம்பி ராமானுஜரை மாலாதரரிடம் திருவாய் மொழி பாடம் கேட்கும்படி சொன்னார். மாலாதரர் ஆள வந்தாரின் சிஷ்யர்.

மாலாதரர் என்று அழைக்கப்பட்ட திருமாமலையாண்டானை நாடி ராமானுஜர் திருவாய்மொழி படித்துவரும் காலத்தில், ஆளவந்தாரிடம் பாடம் கேட்டபடியே அவர் சொல்லக் கேட்ட இளையாழ்வாருக்குப் புதுப்புது விசேஷ அர்த்தங்கள் தோன்றின. அவர் அவற்றைச் சொல்லத் தயங்கவில்லை. ஆனால், மாலாதரருக்கு ராமானுஜருடைய இச்செய்கை பிடிக்கவில்லை. ஆகவே அவர் பாடம் நடத்துவதை நிறுத்தி விட்டார். ராமானுஜரும் மீண்டும் திருமாமலையாண்டா னிடத்துச் சென்று நல்ல இலக்கியமென்பது புதுப்புது அர்த்தங்களைத் தோன்றச் செய்வதேயாகுமென்று விளக்கி, மற்றபடி தொன்மை பண்புக்கு எந்தவிதமான குறைவு கற்பிக்க வேண்டுமென்பது தம் நோக்கமில்லை என்று கூறினார். திருக்கோஷ்டியூர் நம்பியும், பெரியநம்பியும் இதை ஆமோதித்தனர்.

ராமானுஜர் கற்க வேண்டியன அனைத்தும் கற்று அதற்குத் தக நிற்கும் முறையில் தாமாகவும் பாடம் சொல்லத் தொடங்கினார். பல சிஷ்யர்கள் அவரை நாடி வந்தனர். விசிஷ்டாத்வைதத்துக்கு மாறுபட்ட கருத்துக்களை உடையவர்களும் அவரால் ஈர்க்கப்பட்டு இத்தத்துவத்தின் உயர்வை உணர்ந்தனர்.

இந்தச் சமயத்தில்தான், வட நாட்டில் வெற்றிக்கொடி நாட்டி விட்டுத் தென்னகம் திரும்பினார் யக்ஞமூர்த்தி என்ற அத்வைத அறிஞர். அவர் ராமானுஜருடைய புகழ் கேட்டு அவரை வாதத்துக்கு அழைக்கத் திருவரங்கம் வந்தார்.

திருவரங்கம் பெரிய கோயிலில் விவாதம் நடக்க ஏற்பாடானது. யக்ஞமூர்த்தி அறிவு மின்னொளி வீசும் சொல்மாரி பொழிந்தார். ராமானுஜர் எவ்வித சலனமுமின்றி வீற்றிருந்தார். பதினெட்டு நாள்கள் இந்த விவாதம் நடந்தது. பதினெட்டாவது நாள் ராமானுஜருடைய உறுதியைக் கண்டு மனந்தளர்ந்தார் யக்ஞமூர்த்தி. ராமானுஜ சித்தாந்தம்தான் அவருக்கு இத்தகைய நெஞ்சுரத்தைத் தந்திருக்க வேண்டுமென்று கருதி, தம் தோல்வியை ஒப்புக்கொண்டு அவர் பாதங்களில் விழுந்து தன்னையும் காக்க வேண்டுமென்று வேண்டினார். வட நாட்டில் வாகை சூடிய தத்துவ வீரர். ராமானுஜர் அவரையும் தமது சிஷ்யராக்கிக் கொண்டார். அன்றுமுதல் அவருக்கு அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்று பெயர் ஏற்பட்டது.

ராமானுஜ மடத்துக்கருகே தாமும் ஒரு மடத்தை ஸ்தாபித்து, தமது எஞ்சிய நாளைச் சேவையிலும், ஆத்ம விசாரணையிலும் கழித்தார் இப்பெரியவர்.

ராமானுஜர் மூன்று நூல்கள் இயற்றினார். அவை 1. கத்யத்ரயம், 2. நித்யம், 3. கீதா பாஷ்யம். நாராயண மந்திரத்தின் ரகஸ்யத்தை அவர் சிறப்பாகச் சொல்லியருளினார். அவர் பெற்ற வெற்றிகள், இயற்றிய நூல்கள் ஆகியவை, பாரதத்தில் ஒரு இணையில்லாத சிந்தனையாளர், தமது கொள்கைப் போரைத் துவங்கியுள்ளார் என்பதை நிதர்சனமாகக் காட்டியது.

## அதிர்ச்சி வைத்தியம்!



திருவரங்கத்துக் கோயிலை நிர்வகிக்கும் பொறுப்பை மேற்கொண்டார் ராமானுஜர். வைஷ்ணவ இயக்கத்தின் தலைமைப் பீடமாக விளங்கத் தொடங்கியது பெரிய கோயில். அகளங்கர் என்பவரை கோயில் நிர்வாகியாக நியமனம் செய்தார். அகளங்கர் சோழர் குடியைச் சேர்ந்தவர். ஒரு குறுநிலத் தலைவராக விளங்கி வந்தார். அவர் ராமானுஜரின் சிஷ்யராகியது ஒரு சுவை மிக்க கதை.

அகளங்கர் குறுநிலத் தலைவராக இருந்தபோது, அவருக்கு உறங்காவில்லி என்ற மெய்க்காப்பாளர் இருந்து வந்தார். தனுர்தாசன் என்று அழைக்கப்படும் உறங்காவில்லி அகன்ற மார்புடன் கூடிய ஒரு பெரிய வீரர். அவருக்குப் பொன்னாச்சி என்று ஓர் அழகிய மனைவி. அழகை உபாசிக்கும் கலையுள்ளம் கொண்ட உறங்காவில்லி தன் மனைவியை விட்டுப் பிரியாமல் அவள் நிழலென இருந்து வந்தார்.

ஒரு சமயம் இருவரும் சித்திரை விழா காண்பதற்குத் திருவரங்கம் வந்தனர். தெருவில் பொன்னாச்சி

நடந்தபோது, அவளுடைய பொன்னான திருமேனி கதிரவன் ஒளியில் புண்ணாகக் கூடாதென்பதற்காகக் குடை பிடித்துத் தொடர்ந்தார் உறங்காவில்லி. ராமானுஜரும் அவருடைய சிஷ்யர்களும் இக்காட்சியைக் கண்டனர். அழியக்கூடிய ஒன்றை இப்படியும் ஒருவன் உபாசிப்பானோவென்று ராமானுஜர் சிஷ்யர்கள் நகைத்தனர். ஆனால், இதைக் கண்ட ராமானுஜர் உள்ளம் வேறுவிதமாகச் சிந்திக்கத் தொடங்கியது. அவர் மிகச் சிறந்த மனோதத்துவ அறிஞர். அவர் இக் காட்சியைக் கண்டு புன்னகை செய்தவாறு கூறினார்: 'அன்பு செலுத்தத் தெரிந்தவன் ஒருவன் இதோ இருக்கிறான். அன்பின் ஆவேசத்தில் அவனுக்குச் சுற்றுப் புறத்தைப் பற்றிக் கவலை யில்லை. அன்பு செலுத்தத் தெரிந்தவர்களால்தான் பக்தியின் பொருளை உணரவும் முடியும். இவனுடைய அன்பைப் பக்தியாக மாற்றுவது கஷ்டமான காரியமல்ல'.

ராமானுஜர் அவரை நோக்கி நடந்தார். 'நீ என்ன செய்கிறாய்?' என்று வினவினார். 'என் மனைவி உலகிலேயே மிகவும் அழகானவள். அழகை உபாசிக்கிறேன் நான்' என்றார் உறங்காவில்லி. ராமானுஜர் 'இவ்வழகைக் காட்டிலும், என்றும் நிலைத்திருக்கக்கூடிய நித்யமான அழகு இவ்வுலகில் இருக்கிறது' என்றார். 'அது எங்கே இருக்கிறது?' என்று கேட்டார் உறங்காவில்லி. ராமானுஜர் அவரைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றார். திருவரங்கத்து எம்பிரானின் தாமரைக் கண்களைச் சுட்டிக் காட்டினார். உறங்காவில்லி மெய்ம்மறந்து நின்றார். நித்ய அழகைத் தனக்குக் காண்பித்த ராமானுஜர் பாதங்களில் விழுந்து வணங்கினார். அவருடைய சிஷ்யரானார்.

இதைக் கேள்வியுற்ற பொன்னாச்சியும் ராமானுஜரிடத்தில் வந்து சிஷ்யரானார்.

உறங்காவில்லியின் செய்தி கேட்டார் அகளங்கர். தமக்குக் கிடைக்கும் ஊதியம் அனைத்தையும் உறங்காவில்லி ராமானுஜ மடத்துக்குக் கொடுத்து விடுகின்றார் என்றும் அறிந்தார். உறங்காவில்லியை இவ்வாறு மாற்றிவிட்ட

புண்ணிய புருஷரைக் காண வேண்டுமென்று விருப்பம் கொண்டார். ராமானுஜரைக் கண்டபோது அவருடைய மேதா விலாசத்தால் ஆட்கொள்ளப்பட்டுத் தாமும் அவருடைய சிஷ்யரானார். அவருடைய அனுபவத்தைப் பயன்படுத்திக் கொள்ளத் தீர்மானித்த ராமானுஜர் அவரை மடத்தின் நிர்வாகியாக ஆக்கினார்.

உயர்ந்த ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் நடைமுறை யாக விதித்துவிட்ட ராமானுஜரைக் கண்டால் கோயில் அர்ச்சகர்களுக்குப் பிடிக்கவில்லை. மேலும் காஞ்சியிலிருந்து வந்தவர் என்ற வேற்றுமை உணர்ச்சியும் அவர்களிடம் இருந்தது. அவர்கள் ராமானுஜரை ஒரேயடியாக ஒழித்துவிடத் தீர்மானித்தனர்.

ராமானுஜர் துறவியாகி விட்ட பிறகு, ஏழு வீடுகளுக்குச் சென்று பிச்சை ஏற்று உண்பது வழக்கம். அர்ச்சகர்கள் அந்த ஏழு வீடுகளைச் சார்ந்தவர்களில் ஒருவரிடம் சென்று ராமானுஜர் உணவில் விஷம் கலக்கும்படி தூண்டினர். இதற்காக அவருக்கு நிறைய நிதியும் வழங்கினர். அவரும் தம் மனைவியிடம் விஷம் கலந்த உணவை ராமானுஜருக்குத் தருமாறு சொன்னார். அப்பெண்மணி முதலில் மறுத்தாலும், கணவரின் சொல்லைத் தட்ட முடியவில்லை. ராமானுஜர் பிச்சை ஏற்க வந்தபோது, அப்பெண்மணியின் மனம் துன்ப மடைந்தது. உணவு இடும்போது கை நடுங்கியது. கண்களில் திரையிட்ட நீரை மிகவும் சிரமப்பட்டு மறைத்துக்கொண்டே உள்ளே போனார். இதைக் கண்ட ராமானுஜருக்குச் சந்தேகம் வந்தது. அவர் உணவை எடுத்துக்கொண்டு போய் ஆற்றில் எறிந்துவிட்டார். இது பற்றி மேலும் அவர் தொடர விரும்பவில்லை. இதனால் அந்தப் பெண்மணிக்குத்தான் தொல்லை என்று இந்த விஷயத்தை அவர் அடியோடு மறந்துவிட்டார்.

இந்நிகழ்ச்சியின் காரணமாகப் பிச்சை ஏற்பதை ராமானுஜர் நிறுத்தவில்லை. ஓர் அந்தணன் தன்னடக்கம் பெறுவது இதை

யொட்டியே என்பது அவர் கருத்து. கொங்கு தேசத்தில் இருந்து வந்த ஒரு பெண்மணியிடம் அவர் இதைப் பின்னொரு சமயம் விளக்கியுள்ளார்.

ராமானுஜருக்கு ஜாதி வேறுபாட்டில் நம்பிக்கை கிடையாது. குறிப்பாக, இறைவழிபாட்டில் ஒன்றியவர்களை இந்த வேறுபாட்டின் அடிப்படையில் பார்க்கக்கூடாதென்பது அவர் எண்ணம். இதுபற்றி அவர் வாழ்க்கையில் பல செய்திகள் கூறப்படுகின்றன.

உறங்காவில்லி தாசர் அந்தணர் வகுப்பைச் சேர்ந்தவரல்ல. ராமானுஜர், காவேரிக்குச் சென்று நீராடிவிட்டுத் திரும்பும் போது, உறங்காவில்லியின் தோள்களின் மீது கைகளை வைத்துக்கொண்டு வருவது வழக்கம்.

உடையவருடைய அந்தணச் சீடர்களுக்கு இது பிடிக்க வில்லை. ஒரு சமயம் ஒரு சீடர் ராமானுஜரை இது குறித்து கேட்டார். ராமானுஜர் பதில் சொல்லவில்லை. ஆனால், இந்தக் கேள்விக்கு விடையாக ஒரு சம்பவத்தை உருவாக்கி னார்.

தம்முடைய சிஷ்யர்களில் அந்தரங்கமான ஒருவரை அழைத்து, மடத்திலுள்ள மற்றவர்களுடைய ஆடைகளைக் கிழிக்குமாறு செய்தார். அடுத்த நாள் துணிகள் கிழிக்கப்பட்டதை அறிந்த சிஷ்யர்கள் கோபத்தில் கூக்குரலிட்டனர். தகாத வார்த்தை களையெல்லாம் கூறினார்கள். ராமானுஜர் ஒன்றும் பேச வில்லை.

பிறகு பின்னொரு சமயம் ராமானுஜர் இரு சிஷ்யர்களை அழைத்து உறங்காவில்லியின் மனைவி பொன்னாச்சி உறங்கும்போது, அவள் அணிந்திருக்கும் நகைகளை எடுத்து வருமாறு கட்டளையிட்டார். அவ்வாறே சென்ற சிஷ்யர்கள், அவளுடைய ஒரு பக்க அணிகளைக் களவாடியபோது, இதை உணர்ந்த பொன்னாச்சி, மற்றொரு பக்க அணிகளையும் அவர்கள் எடுத்துச் செல்லட்டுமென்று புரண்டு படுத்தாள்.

அவள் விழித்துவிடப் போகின்றாள் என்று அஞ்சி அந்தச் சிஷ்யர்கள் ஓடிவிட்டனர். ராமானுஜரிடம் சென்று நடந்ததைத் தெரிவித்தனர். எம்பெருமானார் அவர்களை மீண்டும் பொன்னாச்சி வீட்டுக்குச் சென்று நடப்பதை அறிந்து தெரிவிக்குமாறு அனுப்பினார். அவர்கள் சென்று அவளுடைய வீட்டு வாசல் கதவருகே நின்றனர். உள்ளே உறங்கா வில்லியும், பொன்னாச்சியும் உரையாடிக் கொண்டிருந்தனர். உறங்காவில்லிக்கு, திருட வந்தவர்களுக்கு மறுபக்க அணி களும் கிடைக்கவில்லையே என்ற கோபம். பொன்னாச்சி மனப்பான்மையே இதற்குக் காரணமென்று குற்றஞ்சாட்டி னார். 'தன்னுடைய நகைகள் அவற்றைத்தான் கொடுக் கின்றோம்' என்று அவள் கர்வப்பட்டதாலேயே, அவர்களுக்கு நகைகள் கிடைக்கப் பெறவில்லை என்றார். ராமானுஜரின் சிஷ்யர்கள் உறங்காவில்லியின் மனப்பாங்கு கண்டு வியந்து நின்றார்கள். அவர்கள் உடையவரிடம் சென்று இதைத் தெரிவித்தார்கள்.

அடுத்த நாள், ராமானுஜர் எல்லா சிஷ்யர்களையும் கூட்டினார். முதல் நாள் தான் அனுப்பிய சிஷ்யர்களை அழைத்து, உறங்காவில்லியின் வீட்டில் நடந்ததைக் கூறும்படி கட்டளை யிட்டார். அவர்கள் கூறினார்கள். ராமானுஜர் அவர்கள் தம் அனுபவத்தைச் சொல்லி முடித்தவுடன் புன்னகை பூத்தார். பிறகு சொன்னார். 'நீங்கள் உங்களுடைய ஆடைகள் கிழிந்திருப்பதைக் கண்டு கோபத்தில், சொல்லக்கூடாத வார்த்தைகளைக் கூறினீர்கள். ஆனால், பொன்னாச்சியின் - தம் மனைவியின் அணிகளைத் திருடர்கள் கவர்ந்து போனார்களென்று அறிந்தும், உறங்காவில்லி எப்படி நடந்து கொண்டார் என்று பாருங்கள். அந்தணர்களாகிய உங்களுக்கு - அந்தணர்களாக இருப்பினும் அடக்கத்தை மேற்கொண்டு தாழப்பண்ணிக் கொண்டோம் என்ற செருக்குற்ற உங்களுக்கு இது ஒரு படிப்பினை. உறங்காவில்லி அடக்கத்தையோ அல்லது தாழப்பண்ணிக் கொள்ளுதலையோ பாவனையாக மேற்கொள்ள வேண்டிய அவசியமில்லை. அவர்

இயல்பாகவே அடக்கமானவர். அந்தணர் குலத்தில் பிறக்க வில்லை என்ற காரணத்தினால், தாழப் பண்ணிக்கொள்ள வேண்டிய அவசியமுமில்லை. நான் நீராடிய பிறகு உறங்கா வில்லியின் தோள்களின் மீது கைகளை வைத்துக்கொண்டு வருவதன் காரணம் புரிந்ததா? அவர் பவித்திரமானவர்!'

உறங்காவில்லியின் பெருமையை உணர்ந்தவர் கூரேசர். அவர் உறங்காவில்லியை முதன்முதல் கண்டபோதே 'மகாமதி' என்றழைத்தார். மதி அனுபவத்தால் வருவது, மகாமதி இயல்பான உணர்வினால் வருவது என்பது கூரேசர் கருத்து.

மாறனேர் நம்பி ஹரிஜன வகுப்பைச் சார்ந்தவர். அவர் ஒரு சமயம் ஒரு கொடிய நோயினால் பாதிக்கப்பட்டு வருந்தினார். ஊர் எல்லைப்புறத்தில் ஒரு சிறு குடிசையில் அவர் வசித்து வந்தார். பெரியநம்பி அவருக்கு உணவு எடுத்துச் செல்வது வழக்கம்.

ராமானுஜருக்கு மாறனேர் நம்பி என்று ஒருவர் இருக்கின்றார் என்பது தெரியாது. ஆனால், ஒரு நாள் பெரியநம்பி உணவு எடுத்துச் செல்வதைக் கண்டதும், அவர் எங்கு செல்கின்றார் என்று அறியும் ஆவல் அவருக்கு ஏற்பட்டது. பெரிய நம்பியைப் பின்தொடர்ந்தார்.

பெரியநம்பி, மாறனேர் நம்பிக்கு உணவு படைத்ததைக் கண்டதும் அவர் மனம் நெகிழ்ந்தது. உத்தமமான வைஷ்ண வரைக் கண்டுவிட்ட மகிழ்ச்சி அவருக்கு உண்டாயிற்று. ஆனால், ஊரிலிருந்த அந்தணர்களுக்குப் பெரியநம்பியின் செய்கை பிடிக்கவில்லை. அவர் வீட்டு வாசலில் முள்ளைப் போட்டு, அவரைச் சமூகத்தினின்றும் விலக்கி வைத்தனர். பெரியநம்பியின் மகள் அத்துழாய்க்கு மிகவும் கோபம். இராமானுஜரின் உபதேசங்களில் மூழ்கித் திளைத்தவள் அவள். பெரியவர்கள் விஷயத்தில் ஜாதி வேறுபாடு குறுக்கிடக்கூடாது என்று உறுதியாக நம்புகிறவள். அவள் திருவரங்கப் பெருமாளின் கோயில் தேர் தன் வீட்டைக் கடந்துபோக முடியாமல் தடுத்து விட்டாள். தந்தைக்கு

நியாயம் வழங்கிவிட்டுத்தான் அரங்கண்ணல் மேலே செல்ல வேண்டுமென்று கட்டளையிட்டு விட்டாள். இவ்வளவு தூரம் அவளுக்குத் துணிவு வரச் செய்தன, ராமானுஜரின் போதனைகள்.

ராமானுஜர் அத்துழாயைத் தமது இளைய சகோதரியாகவே பாவித்தார். பெற்றோருக்கு அடங்கிய, மந்த புத்தியுள்ள ஒருவருக்கு அவள் மனைவியானாள். பெற்றோர்களோ பேராசைக்காரர்கள். பெரியநம்பி கொடுத்த சீதனம் போத வில்லையென்று முணுமுணுத்து வந்தனர். அத்துழாய் ஒரு 'சீதன வெள்ளாட்டி' கொண்டு வரவில்லை என்று அவள் மாமியார் அடிக்கடி இடித்துக் கூறுவது வழக்கமாயிற்று. சீதன வெள்ளாட்டி என்றால், மணமாகிச் செல்லும் பெண், புகுந்த இடத்தில் பணியாற்றுவதற்கென்று பணிப்பெண்ணை அழைத்துச் செல்வதாகும். அத்துழாய் ஒரு நாள் பொறுக்க முடியாமல், தந்தையிடம் முறையிட்டாள். தந்தையோ, அவளை உடையவரிடம் அனுப்பினார். ராமானுஜர் முதலியாண்டானைக் கூப்பிட்டு, அத்துழாயின் மாமியாருக்கு ஒரு பாடம் கற்பித்து விட்டு வரும்படி அனுப்பினார். முதலி யாண்டான் சீதன வெள்ளாட்டியாக அத்துழாயுடன் சென்றார். முதலியாண்டானைக் கண்ட அத்துழாயின் மாமியார் திடுக் கிட்டார். ராமானுஜர் மடத்தைச் சார்ந்த ஒரு பெரியவர், வீட்டு வேலைகள் செய்ய வந்து விட்டாரென்பது அவளுக்கு அதிர்ச்சியைத் தந்தது. இதனால் பாவம் உண்டாகுமென்று உணர்ந்து, ராமானுஜரிடம் சென்று முதலியாண்டானைத் திரும்ப அழைத்துக் கொள்ளுமாறு வேண்டினார். அவர் பாதங்களில் வீழ்ந்து மன்னிப்புக் கேட்டார், அத்துழாயின் மாமி யார். ராமானுஜர் செய்த அதிர்ச்சி வைத்தியம் பயனளித்தது.

முதலியாண்டான் நல்ல முறையில் எல்லாவற்றையும் கற்றுணர்ந்த பெரியவர்தாம். இருப்பினும், குருவின் கட்டளைப்படி ஒருவர் வீட்டுக்குச் சென்று துணிகளைத் துவைப்பது இழிவான தொழிலென்று அவர் கருதவே இல்லை. கீதையைப் பற்றி சொற்பொழிவாற்றும்

உற்சாகத்தோடு அவர் துணிகளைத் துவைக்கத் தொடங்கினார், அத்துழாயின் மாமியார் வீட்டில். தொழிலிலே உயர்வு இல்லை; தாழ்வு இல்லை. இதுவே ராமானுஜர் அடிக்கடி வற்புறுத்தி வந்த உண்மை. ராமானுஜர் மடத்தில் காரியங்கள் பகிர்ந்து செயலாற்றப்பட்டன. தொழில் பிரிவின்னகள், ஒருவருடைய கல்விக்கேற்றவாறு நிர்ணயிக்கப்படவில்லை. எல்லாத் தொழில்களையும் எல்லோரும் மகிழ்ச்சியோடு செய்தனர். நம்பியாச்சார் மடப்பள்ளியைக் கவனித்துக் கொண்டார். உறங்காவில்லி நிதிக்குப் பொறுப்பேற்றார். முதலியாண்டான் தினசரி நடைமுறைகளை மேற்பார்வையிட்டார். ராமானுஜ மடத்தில் சமயம், பண்பு ஆகியவற்றைக் கற்றுக்கொண்டதோடு மட்டுமல்லாமல், ராமானுஜ சிஷ்யர்கள் அடக்கத்தையும் ஒரு அனுபவப் பாடமாகக் கற்றனர்.

## காஷ்மீரில் ஒரு தேடல்



திருப்பதிக்குச் சென்று ராமாயணம் பாடம் கேட்கத் தீர்மானித்தார் ராமானுஜர். திருமலை நம்பிக்கு ராமாயணத்தில் மிகவும் ஈடுபாடு. ஆகவே மாமாவிடம் போய், ராமாயணத்தின் ரகஸ்யார்த்தங்களை உணர விரும்பிய உடையவர், சில சிஷ்யர்களுடன் புறப்பட்டார்.

'அஷ்ட சகஸ்ர கிராமம்' என்ற இடத்துக்கு அவர் சென்றார். அங்கு அவருடைய சிஷ்யர்கள் இருவர் இருந்தனர். யக்ஞேசர் என்பது ஒருவர் பெயர். மற்றவருடைய பெயர் வரதய்யர்.

வரதய்யர் மிகவும் ஏழை. ராமானுஜர் ஏழைகளுடைய நண்பர் என்ற முறையில், வரதய்யர் குடிலுக்கு முதலில் சென்றார். வரதய்யர் பிட்சை ஏற்கச் சென்றிருந்தார். அவர் மனைவி வந்திருக்கும் விருந்தினர் யார் என்று உணர்ந்தார். ஆனால், வெளியே சென்று வரவேற்கும் நிலையில் அவரில்லை. அவர் அணிந்திருந்த ஆடைகள் கிழிந்திருந்தன. இதை அறிந்த ராமானுஜர் தம் தலையில் அணிந்திருந்த துணியை உள்ளே எறிந்தார். அதைத்

தரித்துக்கொண்டு வெளியே வந்த வரதய்யர் மனைவி, ராமானுஜரை உள்ளே அழைத்துச் சென்று பலகையிட்டு அமரச் செய்து உபசரித்தார். விருந்துண்டு செல்ல வேண்டும் என்று வேண்டி நின்றார். உடையவரும் அதற்கு இசைந்தார். ஆனால் வீட்டிலோ ஒரு சிறு தான்யம்கூட இல்லை. அப்பொழுது வரதய்யர் மனைவிக்கு அவ்வூரிலிருந்த ஒரு வணிகன் நினைவு வந்தது. அவன் ஒரு கயவன். வரதய்யர் மனைவியின் அழகைக் கண்டு மயங்கியவன். வரதய்யரின் மனைவிக்கு இது நினைவுக்கு வந்ததும், அந்த வணிகன் வீட்டுக்கு விரைந்தார். அரிசி, உப்பு, மிளகு ஆகிய சமையற் பொருள்களை அவனிடம் கெஞ்சிக் கேட்டார். இதற்கு விலையாக என்ன செய்ய வேண்டுமென்பது அவர் உணர்ந்ததுதான். ஆனால், விருந்தினரை தவறக்கூடாதென்பது அவர் விருப்பம். வணிகனும் பொருள்களைத் தந்தான். வருவதாக வாக்களித்து விட்டு திரும்பினார்.

ராமானுஜர் விருந்துண்டு சென்ற பிறகு, வரதய்யர் வந்தார். நடந்த செய்தி கேட்டு மகிழ்ந்தார். ராமானுஜருக்கு விருந்து படைத்த மனைவியைப் பாராட்டினார். இருவருமாக வணிகனிடம் சென்றனர். வரதய்யர் கூறினார்: 'நீ வேண்டி நின்ற என் மனைவியின் உடல் இதோ இருக்கின்றது; எடுத்துக் கொள். கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு விட்டால், உடம்பு ஒரு தேவையற்ற இடைச் செருகல். நீ அவளுடைய உடலை எடுத்துக் கொள். ஆனால், அவள் உள்ளம் எனக்குச் சொந்தம்.'

வணிகன் திடுக்கிட்டான். அவன் வரதய்யர் பாதங்களில் விழுந்து வணங்கினான்.

இதைப் பற்றிக் கேள்வியுற்ற ராமானுஜர், வணிகனை அழைத்துத் தம் சிஷ்யனாக்கிக் கொண்டார். மன்னிப்புப் பெறத் தகுதி இல்லாதவர்கள் உலகில் இல்லையென்பது அவர் கருத்து.

செல்வந்தராகிய யக்ஞேசரைக் கண்டபோது, ராமானுஜர் அவர் தமது கர்வத்தை ஒழித்தல் வேண்டுமென்று வற்புறுத்தினார். வைணவ அடியார்களுடைய ஆடைகளைத் துவைக்குமாறு யக்ஞேசரைப் பணித்தார். இதுவே அடக்கத்தையும் பெற வழி என்றும் கூறினார்.

திருப்பதி மலைகளில் ராமானுஜர் தவழ்ந்துகொண்டே சென்றார். தம் பாதங்களை வைத்துக் களங்கப்படுத்தக் கூடாதென்பதற்காக அவர் இவ்வாறு சென்றார். அங்கு அவர் தம்முடைய சிஷ்யர் அனந்தசூரியைக் கண்டார். அனந்தசூரி, ராமானுஜருடைய விருப்பத்துக்கேற்ப, திருப்பதிக்கு வந்து, நந்தவனம் அமைத்து இறைவனை வழிபட்டார். பொழில் வண்ண மலர்களோடு பூத்துக் குலுங்கியது. 'முன்பு உன் பக்திக்கு வித்திட்டேன். இப்பொழுது அதன் பலன் கிடைத்தது' என்று ராமானுஜர் அவரைத் தழுவிக்கொண்டு கூறினார்.

பொழில்களில் பூப்படுக்கைகள் விரிந்திருந்தன. நீண்ட வளர்ந்த மரங்கள் இருந்தன. வண்டுகளின் ரீங்காரமும், புள்ளினங்களின் இன்னிசையொலியும், இயற்கையின் அழகை விமர்சித்தன. சமயத்தை அழகு வழிபாட்டின் அடிப்படையில் கண்ட ராமானுஜர், இறைவனை புவனசுந்தரராகக் கண்ட ராமானுஜர், மெய்ம்மறந்து நின்றார். இயற்கையில் இறைவனைக் கண்டு, இந்த ஐக்கியத்தில் தம்மையும் கரைத்து தெளிந்து நின்றார்.

அவர் தமது மாமனாகிய திருமலை நம்பியுடன் ஓராண்டுக் காலம் வசித்தார். இருவருமாக ராமாயணத்தை விசிஷ்டாத்வைத கண்ணோட்டத்துடன் ஆராய்ந்தனர். ஒரு நாள் ராமானுஜர் நந்தவனத்திலிருந்து திரும்பும்போது, ஒருவர் பாம்பின் வாயில் விரலை விட்டுக் கொண்டிருப்பதைக் கண்டார். அருகில் சென்று பார்த்ததும் அவர் தம்முடைய சின்னம்மாவின் மகன் கோவிந்தரென்று அறிந்தார். அவர் செய்கை பற்றிக் கேட்டபோது, கோவிந்தன் சொன்னார்: 'பாம்பு என் காலருகே வந்து வாயைத் திறந்தது. அதன் நாக்கில்

ஒரு முள் இருந்தது. அதை எடுத்தேன்'. ராமானுஜர் அவரைத் தழுவினார். 'நீதான் உண்மையான வைஷ்ணவன். துன்புற்ற உயிரினமொன்று, அது கொடுமை வாய்ந்ததாயினும் அதன் துன்பத்தைக் களைந்தாய்' என்று மகிழ்ந்தார்.

அவர் திருவரங்கம் திரும்பிச் சென்றபோது கோவிந்தரையும் உடன் அழைத்துச் சென்றார். கோவிந்தரின் தாய்க்கு ஒரு வருத்தம். மகன் மணமாகிய போதிலும் மனைவியுடன் இல்லறம் நடத்தவில்லையென்று வேதனை கொண்டிருந்தார். ராமானுஜரைக் கோவிந்தருக்கு அறிவுரை சொல்லும்படி வேண்டினார். உடையவர் இந்தச் செய்தியைக் கோவிந்தரிடம் கூறி, மனைவியுடன் இல்லறம் நடத்தும்படி பணித்தார். ஒரு நாளிரவு கோவிந்தரும் அவர் மனைவியிடம் பள்ளியறையில் சந்தித்தனர். கோவிந்தர் மனைவியுடன் இறைவன் திருப்புகழ் பற்றிக் கூறத் தொடங்கினார். சிற்றின்ப அறை பேரின்ப அறை யாயிற்று. அடுத்த நாள், கோவிந்தரின் கொள்கை உறுதியைப் பற்றிக் கேள்விப்பட்ட எம்பெருமானார், அவரைத் துறவறம் மேற்கொள்ளச் செய்தார். புலனடக்கம் பெற்ற கோவிந்தர் இதற்கு மிகவும் தகுதி வாய்ந்தவர் என்று தீர்மானித்தார் ராமானுஜர்.

கோவிந்தர் தத்துவ நூல்களை எல்லாம் கற்றுணர்ந்த பெரியார். அவருக்கு 'எம்பார்' என்ற பெயர் வழங்குவதாயிற்று.

திருப்பதியில் எழுந்தருளியுள்ள திருவேங்கடமுடையானுக்கு ராமானுஜர், சங்கும், சக்கரமும் வழங்கியதாகக் கதைகள் கூறு கின்றன. இது குறித்து பலவிதமான விளக்கங்கள் தரப்படு கின்றன. திருப்பதி ஒரு காலத்தில் சக்தியின் ஸ்தலமாக இருந்ததென்றும், பிறகு ராமானுஜரின் முயற்சியினால் வைணவப்பதி ஆயிற்று என்றும் கூறுவர். வேறு சிலர், காணா மற்போன சங்கையும், சக்கரத்தையும்தான் ராமானுஜர் மீண்டும் அப்பனுக்குச் சாத்தினார் என்றும் கூறுவர்.

இந்தக் காலத்தில்தான் ராமானுஜர் பிரம்ம சூத்திரத்துக்கு பாஷ்யம் எழுதினார். அவருடைய கொள்கைகள் நாடெங்கும்

பரவியிருந்தன. ஒரு புதிய சமய சூழ்நிலை உருவாவதற்கு அவர் காரணமாக இருந்தார். அவருடைய குருவாகிய ஆளவந் தாரின் திருமேனியின் எதிரே அவர் எடுத்துக்கொண்ட சபதங்கள் நிறைவேறுவதற்கான சந்தர்ப்பங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன என்று அவர் மனத்துக்குப் பட்டது.

பாஷ்யம் எழுதுவதைப் பற்றி அவர் சிந்திக்கத் தொடங்கினார். 'போதாயன விருத்தி' என்ற நூல் பற்றி அவர் கேள்விப் பட்டிருந்தார். ஆதிசங்கரர் இதைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தார். காஷ்மீரில் ஒரு பிரதி கிடைக்கின்றது என்று அறிந்தார். கூரேசருடன் அவர் காஷ்மீர் யாத்திரை செய்யப் புறப்பட்டார். சமஸ்கிருத பண்டிதர்கள் இந்த நூலின் ஏட்டுச் சுவடியை ராமானுஜருக்குக் காட்டத் தயங்கினார்கள். ராமானுஜர் அரசரைக் கண்டு பேசினார். அவருடைய கூர்மையான அறிவும் பொலிவும் அரசரை மிகவும் கவர்ந்தன. அவர் அந்த நூலை ராமானுஜருக்கே அளித்து விட்டார். அவர் அந்த நூலை எடுத்துக்கொண்டு புறப்பட்டுச் சென்றபோது, காஷ்மீர் பண்டிதர்களின் ஆட்கள் வழியில் தாக்கி, நூலைத் திரும்ப எடுத்துக்கொண்டு வந்து விட்டார்கள். இதனால் வருந்திய ராமானுஜரிடம், கூரேசர் அதுபற்றி வருந்த வேண்டாம் என்றும், தாம் அந்நூல் முழுவதையும் மனப்பாடம் செய்து விட்டதாகவும் கூறினாரென்றும் கர்ண பரம்பரைச் செய்திகள் தெரிவிக்கின்றன.

ஸ்ரீரங்கம் திரும்பியவுடன் பாஷ்யம் எழுதத் தொடங்கினார் ராமானுஜர்.

## நாடு கடந்த வைணவம்



கூரேசரின் நினைவாற்றல் ராமானுஜருக்கு மிகவும் பயன்பட்டது. ராமானுஜர் சொல்லச் சொல்ல கூரேசர் எழுதினார்.

ஆனால், ராமானுஜரிடம் கருத்து வேறுபாடு ஏற்பட்டால், அவரை நேரடியாக உடனுக்குடன் மறுக்காமல், எழுதுவதை நிறுத்திவிடுவார் கூரேசர். ஒரு சமயம், ராமானுஜர் கூறியது விசிஷ்டாத்வைதத்துக்கு முரண்பாடானது என்று அவருக்குப் பட்டபோது, அவர் எழுதுவதை நிறுத்திசும்மாயிருந்தார். இது உடையவருக்குக் கோபத்தைத் தந்தது. 'ஏன் எழுதவில்லை?' என்று வினவிய போது, கூரேசர் தம் கருத்தைக் கூறினார். ராமானுஜர் சிறிது நேரம் சிந்தித்த பிறகு கூரேசர் கூறுவது சரியென்று ஒப்புக்கொண்டார். கூரேசர் மனைவி ஆண்டாள் ஒரு பெரும் அறிஞர். ராமானுஜர் அவருடைய கருத்துக்களுக்கும் பெரும் மதிப்பளித்தார்.

ராமானுஜர் நூறுக்கு - அதாவது அவர் பிரம்ம

சூத்திரங்களுக்கு எழுதிய வியாக்கியான நூலுக்கு ஸ்ரீ பாஷ்யம் என்று பெயர். விசிஷ்டாத்வைதத் தத்துவத்தை இது விளக்க மாகத் தருகிறது. தனிப்பட்ட ஒரு கடவுள் பரத்வம், குணங் களால் அவர் விசேஷம் பெறுவதையும் இது கூறும்.

ராமானுஜர் ஸ்ரீ பாஷ்யம் எழுதி முடித்த பிறகு அவர் புகழ் நாடெங்கும் பரவலாயிற்று. ஆளவந்தாரின் மனோ விருப் பத்தை பூர்த்தி செய்தாரென்பது மட்டுமல்ல, மற்றைய தத்து வங்களை இவர் மறுத்தாரென்ற அளவில், ஸ்ரீ வைஷ்ணவர்கள் இவரைக் கொண்டாடத் தொடங்கினார்கள். வைஷ்ணவர்கள் சரித்திரத்தில், ஸ்ரீ பாஷ்யம் ஏற்பட்ட செய்தி ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும்.

ராமானுஜருக்கு ஆழ்வார்கள் சென்ற ஸ்தலங்களுக்கெல்லாம் செல்லவேண்டுமென்ற ஆர்வம் ஏற்பட்டது. எந்த ஊருக்குப் போனாலும் அவர் கோயில் விவகாரங்களில் பல சீர்த்திருத் தங்கள் செய்தார். சமயம், சிலருக்கு மட்டும்தான் என்று எண்ணாமல், ஒரு சாதாரண மனிதனும் அதில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்பது அவர் விருப்பம். கோயில் வழிபாடு முறைகளை அதற்கேற்ப அவர் திருத்தி அமைத்தார்.

திருப்புளியங்குடிக்கு அவர் சென்றபோது, ஒரு ஹரிஜனப் பெண் எதிரே வந்தாள். ராமானுஜருடைய சிஷ்யர்களில் ஒருவர், அவளை ஒதுங்குமாறு கூறினார். உடனே அந்தப் பெண், எந்தப் பக்கம் ஒதுங்க வேண்டுமென்று வினவினாள். இறைவன் எல்லாப் பக்கங்களிலும் சர்வவியாபியாக விளங்கும்போது, எந்தப் பக்கம் ஒதுங்கினால் அவருடைய புனிதத் தன்மைக்குக் களங்கம் ஏற்படாதென்று கூறும்படி கேட்டாள். ராமானுஜர் அந்தப் பெண்ணின் கூர்மையான மதிநுட்பத்தைக் கண்டு வியந்தார். திருமங்கை மன்னர் பிறந்த திருப்புளியங்குடியில் சாதாரண மக்களும் எவ்வளவு நுட்ப மான அறிவு, அனுபவம் உடையவர்களாக விளங்குகிறார்கள் என்று அவருக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. சிஷ்யரை நோக்கி, அப்பெண் அவருக்குச் சரியான பாடம் கற்பித்து விட்டதாகச் சொன்னார்.

அவர் திருக்குடந்தை, திருமாளிருஞ்சோலை, திருப்புல்லணி, ஆழ்வார்திருநகரி, திருக்குறுங்குடி ஆகிய இடங்களுக்குச் சென்றார்.

திருக்குறுங்குடியில் ஒரு சம்பவம் ஏற்பட்டது. திருமால் ஒரு வைஷ்ணவராகத் தோன்றி, ராமானுஜரை ஒரு கேள்வி கேட்டார்! இறைவன் பல அவதாரங்கள் எடுத்தும் சீர்திருத்த முடியாத மக்களை, ராமானுஜர் தம்மால் எப்படிச் சீர்த்திருத்த முடியுமென்று நம்புவதாகக் கேட்டார். இவ்வாறு முயன்று அவர் வெற்றியடைந்து வருவதற்கும் என்ன காரணம் என்று கேட்டார். துவயமந்திர ரகஸ்யத்தைச் சொல்லி, உலகில் மக்களை நலமாக வாழச் செய்வதற்கான ஒரே மந்திரம் நம்பிக்கையென்றும் கூறினார்.

நம்பிக்கை இல்லாவிட்டால் உலகில் பற்றோடு வாழ முடியாது. இறைவனும் பற்று உடையவனாகி, பக்தர்கள் நல் வழியில் செல்வதே தன் குறிக்கோளாக இருக்கிறான். அதற் கேற்ப மனிதனும் பற்று உடையவனாகி அவன் திருத்தொண்டு களாகிய சமூக சேவைகளில் ஈடுபட வேண்டும். எப்பொழுது மனிதனுக்குத் தான் செய்யும் காரியங்களில் சந்தேகம் ஏற்படத் தொடங்குகின்றதோ அப்பொழுது அவன் வெற்றியடைய முடியாது. ராமானுஜரின் இந்த உபதேசங்களைக் கேட்ட இறைவன் மகிழ்ந்து அவரை வாழ்த்திவிட்டு மறைந்தார்.

திருவண்பரிசாரத்தில், வேறு கொள்கைகளை உடைய பல அறிஞர்களிடம் ராமானுஜர் வாதம் நிகழ்த்தியதாகக் கூறப் படுகிறது. அவர் பிரம்ம சூத்திரத்துக்கு ஸ்ரீ பாஷ்யம் எழுதி யதைக் கண்டு பொங்கி, அவர்கள் அவரை வாதத்துக்கு அழைத்தார்கள் என்று சொல்லுவர். இந்த வாதங்களில் அவர் வெற்றியடையக் கண்ட நாமகள் அவரை வாழ்த்தி, 'நீ பாஷ்யகாரர்' என்று அழைத்ததாகக் கதைகள் உண்டு.

தெற்கே சென்று ராமானுஜர் விசிஷ்டாத்வைத மதம் பரவு வதற்கான சூழ்நிலைகள் உருவாக்கிவிட்டு வந்தாரென்று இதனால் அறிய முடிகிறது. வைஷ்ணவம் ஒரு குறுகிய எல்லையில் சிலரால் மட்டும் தழுவப்பட்ட மதமாக இருந்த

நிலை மாறி, தென்னாடெங்கும் பரவிய ஒரு இயக்கமாக விளங்கத் தொடங்கியது. ராமானுஜர் இவ்வியக்கத்தின் தலைவராக விளங்கினார்.

அக்காலத்திய சோழ அரசர் ராமானுஜருக்குக் கொடுமை செய்தாரென்று சரித்திரச் செய்திகள் கூறுகின்றன. ராமானுஜர் கி.பி. 1017-லிருந்து 1137 வரை வாழ்ந்தார். இக்காலத்தில் ஐந்து சோழ அரசர்கள் ஆண்டார்கள். சோழ ஆட்சியின் மகோன்னத மான காலம் இது. ராஜராஜ சோழர் ஒரு பெரும் சாம்ராஜ்யத்தை உருவாக்கி ஆண்டார். நாடெங்கும் சமயப் புத்துணர்ச்சியும், கலைகளின் வளர்ச்சியும் மேலோங்கி விளங்கின. ஆழ் வார்கள், நாயன்மார்கள் ஆகியோரின் பாடல்களினால், பிற மதங்கள் செல்வாக்கை இழந்து, வைணவமும் சைவ சமயமும் தமிழகத்தில் மக்களிடையே மதிப்பைப் பெற்றன. கல்லெல் லாம் கலையானது. சொல்லெல்லாம் வேதமானது.

'பிறவாயாக்கை பெரியோனு'க்கும், 'நீலமேனி நெடியோனு' க்கும் பல கோயில்கள் எழுந்தன.

இக்காலத்தில்தான் புத்த, ஜைன மதங்களுக்கு எதிர்ப்பு பலமாக ஏற்பட்டது. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், சைவ சித்தாந்தம் ஆகிய தத்துவங்கள் புற சமயங்களின் கொள்கை களை வன்மையாகக் கண்டித்தன.

விசிஷ்டாத்வைதமும், சைவ சித்தாந்தமும் தமிழகத்தில் பிறந்த தத்துவங்கள். விசிஷ்டாத்வைதத்தில் விஷ்ணு முழு நிலைக் கடவுள். சைவ சித்தாந்தத்தில் சிவன்தான் அனைத் துக்கும் அப்பாற்பட்ட இறைவன்.

சைவ சித்தாந்தத்துக்கு அரச ஆதரவு இருந்தது. ராமானுஜர் கொள்கைகளினால் தங்களுடைய மதத்துக்கு ஆபத்து ஏற்படுமோவென்று சைவ சித்தாந்திகள் அஞ்சினர். அவர்கள் அரசரிடம் சென்று முறையிட்டனர்.

ராமானுஜருக்குக் கொடுமை செய்த அரசன் யாரென்று இன்னும் திட்டவட்டமாக முடிவாகவில்லை. பழஞ் செய்திகள் அவனைக் 'கிருமி கண்ட சோழன்' என்று

அழைக்கின்றன. முதல் குலோத்துங்கன் என்று பலர் கூறுவதைச் சிலர் மறுத்து, இவ்வரசனுக்குச் சமயக் காழ்ப்பு இருந்ததாகத் தெரியவில்லை; அவன் ராமானுஜருக்கு துன்பம் விளைவித்திருக்க முடியாதென்றும் சொல்லுகின்றனர். முதல் குலோத்துங்கனுக்கு 'சப்த விஷ்ணுவர்த்தனன் என்று பெயரு முண்டு. ராமானுஜர் சோழ அரசனின் கோபத்திலிருந்து தப்பிக்கச் சோழ நாட்டைவிட்டு நீங்கினாரென்று அவர் வரலாற்றில் இருந்து அறிகிறோம். இது கி.பி. 1104-க்குச் சற்று முன்பு நிகழ்ந்தது. இக்காலத்தில் ஆண்ட அரசன் முதல் குலோத்துங்கன்தான். (கி.பி.1070 1118) ஆகவே ராமானுஜர் சோழநாட்டை விட்டுப் புறப்பட்டுச் செல்லக் காரணமாக இருந்த அரசன் முதல் குலோத்துங்கன்தான் என்று தயக்க மில்லாமல் சொல்லலாம்.

அக்காலத்தில் சமயமும், அரசியலும் இணைந்திருந்தன. இது எல்லா நாடுகளின் வரலாற்றிலும் நாம் பார்க்கும் செய்தி. சமயப் பெரியோர்களின் பலமே அரசனுடைய பலம். நாடெங்கும் பரவியிருந்த மதத்தின் தலைவர்கள், அரசனுக்கு இந்தப் பலத்தை வழங்கினர். ராமானுஜரின் கொள்கைகள், மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்த சமயத்தின் கொள் கைகளுக்கு முரணாக இருந்தன. சமூகத்தின் அமைதியையும், சமய மெய்யுணர்வையும் இக் கொள்கைகள் கெடுத்துவிடக் கூடுமென்ற பிரசாரம் பெருமளவில் ஏற்படத் தொடங்கியது. சைவ சித்தாந்திகளும், ராமானுஜருடைய கொள்கைகளால் பாதிக்கப்பட்ட அக்காலத்திய வைஷ்ணவ பிற்போக்குவாதி களும் ஒன்று சேர்ந்து ராமானுஜரை ஒழித்துக்கட்ட தீர்மானித் தனர். சமயப் பெரியோர்களின் ஆதரவு இல்லாமல் அரசனால் ஆள முடியாது. ஆகவே 'சப்த விஷ்ணுவர்த்தனன்' என்று பெயர் ஏற்பட்டிருந்தாலும், அரசியல் செல்வாக்குக்காக முதல் குலோத்துங்கன், ராமானுஜரை ஒடுக்க முற்பட்டானென்றால் ஆச்சரியப்படுவதற்கில்லை.

## கூரேசர் தியாகம்



சோழ அரசரின் ஆலோசகர்கள், ராமானுஜரிடம் இருந்து ஒரு வாசகத்துக்குக் கையெழுத்து வாங்கும்படி அவரை வற்புறுத்தினர். அவ்வாசகம் 'சிவத் பரம் நாஸ்தி' - சிவனுக்கு மேலான தெய்வமில்லை.

ராமானுஜரை அவைக்கு அழைத்து வர அரசருடைய காவலர்கள் சென்றார்கள். அப்போது ராமானுஜர் நீராடிக் கொண்டிருந்தார். உடையவருக்கு ஏற்பட இருந்த ஆபத்தை உணர்ந்த கூரேசர், குருவின் காவி ஆடையைத் தாம் தரித்து, பெரியநம்பியுடன் அவைக்கு விரைந்தார்.

அரசன் ராமானுஜரைப் பார்த்ததில்லை. அவன் கூரேசர்தாம் ராமானுஜர் என்று நினைத்தான். அவருடைய முகப்பொலிவு கண்டு வியந்து நின்றான். அரசனுடைய உளவாளியொருவன் - (கூரேசரிடம் அவருடைய சிஷ்யனைப் போல் நடித்து அரசனுக்கு உளவறிந்து கூறிய ஒருவன்) பெயர் நாலூரான்... அரசரிடம் அவர் ராமானுஜரல்லரென்றும், கூரேசரென்றும் கூறினான். அரசன் ஓர்

ஏட்டுச் சுவடியைக் கூரேசர் முன்பு எறிந்து கையெழுத் திடும்படி வற்புறுத்தினான். கூரேசர் அதைப் படித்துவிட்டு, 'த்ரோணம் நாஸ்தி தத பரம்' என்று எழுதிக் கையெழுத் திட்டார். 'சிவம்' என்பது ஒரு அளவு. 'சிவம்' என்றளவைக் காட்டிலும் பெரிய அளவுகள் உள்ளன என்பது இந்த வாசகத் தின் அர்த்தம். கூரேசர் எழுதிக் கையெழுத்திட்டது அரசனுக்குச் சினமூட்டியது. கூரேசருடைய கண்களைப் பிடுங்கும்படி கட்டளையிட்டான். அரசருடைய காவலர்கள் தம்மைத் தாக்கு முன்பே கூரேசர் தம் கண்களைப் பிடுங்கிக் கொண்டு விட்டார். 'இப்படிப்பட்ட ஒரு மத வெறிகொண்ட அரசனைக் கண்ட காரணத்துக்காகவே தம் கண்களைப் பிடுங்கி இருக்க வேண்டும்' என்று அவர் கூறினார். அரசனுடைய சேவகர்கள் பெரியநம்பியின் மீது பாய்ந்து அவருடைய கண்களையும் பறித்தார்கள்.

கூரேசரையும், பெரியநம்பியையும் சோழநாட்டுத் தலை நகரின் எல்லைப்புறத்துக்கு அவர்களுடைய சிஷ்யர்கள் அழைத்துச் சென்றார்கள்.

வயது முதிர்ந்த பெரியநம்பியினால் இந்த வேதனை பொறுக்க முடியவில்லை. அவர் வழியிலேயே இறந்துவிட்டார். கூரேசர் இத்தகைய துன்பத்துக்கு உள்ளாகினாலும் மனம் தளர வில்லை. இன்னும் கூடிய சீக்கிரத்தில் நல்ல காலம் வரும் என்ற நம்பிக்கையுடன் இருந்தார்.

கூரேசர் திருவரங்கம் திரும்பியவுடன், அவரைக் கோயிலுக் குள்ளே அனுமதிக்க மறுத்துவிட்டார்கள். ராமானுஜரைத் தம் குருவாக அவர் மதிப்பதை விட்டு விட்டால் கோயிலுக்குள் அனுமதிக்கப்படுவாரென்று அவரிடம் கூறப்பட்டது. இத்த கைய நிலையில் இறைவனைத் தாம் தரிசனம் செய்ய விரும்ப வில்லை என்று கூரேசர் சொல்லிவிட்டார்.

அரசக் கட்டளைக்கேற்ப அரசவைக்குக் கூரேசர் சென்றிருக் கிறாரென்று அறிந்த ராமானுஜர், அவருடைய சிஷ்யர்களின் யோசனைக்கு இணங்க, சோழ நாட்டைவிட்டு வெளியேறுவ தென்று தீர்மானித்தார்.

திருவரங்கத்தை விட்டுப் புறப்பட்டு நீலகிரிக் காடுகளைச் சென்றடைந்தார் ராமானுஜர். வைஷ்ணவ மதத்தைச் சார்ந்த சில வேடர்களை அவர் அங்கு சந்தித்தார். அவர்களுடைய தலைவர் நல்லான் சக்கரவர்த்தி. அவர் அந்தண குலத்தவர் என்றாலும், அனைவரும் இறைவனுடைய மக்களென்று உறுதி கொண்டவர். ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த ஒருவரை அடக்கம் செய்தாரென்ற காரணத்துக்காகச் சமூகத்தால் ஒதுக்கி வைக்கப்பட்டார். இதைப் பற்றிக் கவலைப்படாமல், இறைவனின் அன்பு மதத்தை வேடர்களிடம் அவர் பரப்பி வந்தார்.

ராமானுஜருக்கு நேர்ந்த துன்பத்தைக் கேட்ட வேடர்கள் மிகவும் வருந்தினார்கள். தங்களுடன் இருந்து விடும்படி ராமானுஜரை வேண்டினார்கள். ஆனால், ராமானுஜர் மைசூருக்குச் செல்லவேண்டும் என்று தம் மனத்தில் தோன்றிய கருத்தை அவர்களிடம் தெரிவித்தார்.

வேடர்கள் அவருடைய பிரயாணத்துக்கு வேண்டிய சௌகர் யங்களைச் செய்து கொடுத்தார்கள்.

ராமானுஜர் மைசூர் ராஜ்யத்திலுள்ள தொண்டனூர் என்ற இடத்தைச் சென்றடைந்தார். தொண்டனூர் என்ற இடம் இப்பொழுது தொண்ணூர் என்று அழைக்கப் படுகிறது. அப்பொழுது ஹொய்சால வம்சத்தினர் மைசூரை ஆட்சி புரிந்து வந்தனர். அரசர் பெயர் விட்டல தேவன்.

விட்டல தேவன் ஜைன மதத்தைச் சார்ந்தவன். தில்லியை ஆண்ட முஸ்லிம் மன்னனிடம் போர் புரிந்து உடற்குறை யுற்றவன். துர்தேவதைகள் பிடித்துள்ளதாகக் கருதப்பட்ட ஒரு பெண் அவனுக்கு உண்டு.

விட்டல தேவனுக்குத் தம் மதத் தலைவர்களிடம் கோபம் ஏற்பட்டது. அவர்கள், அவனுக்கு உடற்குறை இருந்ததன் காரணமாக அவன் அளித்த விருந்தில் பங்கெடுத்துக்கொள்ள வர மறுத்தனர். அப்பொழுது மைசூர் வந்திருந்த ராமானுஜர்

இதைக் கேள்விப்பட்டு, உடற்குறையை மதத்தோடு இணைத்து அரசனிடம் உதாசீனமாக நடந்துகொண்ட ஜைன மதத் தலைவர்களின் செய்கையைக் கண்டித்து, அரசனிடம் தம் கருத்தை எடுத்து வெளிப்படையாகக் கூறினார். உடற் குறைவின் காரணமாக மனிதனை இழிவாக நோக்கும் தன்மை வெறுக்கத்தக்கது என்ற அவருடைய கருத்தைக் கேட்டு மகிழ்ந்த அரசன், அவரைத் தன் மகளின் நோயைப் போக்கும் படி வேண்டினான். இளமைப் பருவத்தில் காஞ்சிபுரத்தில் இத்தகைய 'நோயை'த் தீர்த்த ராமானுஜருக்கு இது புது அனுபவமாக இல்லை. அவர் முயற்சி வெற்றி கண்டது. அரசன் மகிழ்ந்து அவரை மைசூரிலேயே இருக்கும்படி கேட்டுக் கொண்டான். அவனும் வைஷ்ணவ மதத்துக்கு மாறினான். விஷ்ணு வர்த்தனராயன் என்ற பெயரும் அவனுக்கேற்பட்டது.

மைசூரில் ஆயிரக்கணக்கான மக்கள் வைஷ்ணவ மதத்தைத் தழுவினர்.

ராமானுஜர் மைசூரில் இருந்தபோது மேல்கோட்டை என்ற இடத்துக்குச் சென்றார். வைஷ்ணவ சம்பிரதாயக் கதைகளில் இது திருநாராயணபுரம் என்று அழைக்கப்படுகின்றது. அவர் ஒரு காட்டின் வழியாகச் சென்றபோது, ஒரு துளசிச் செடியின் மென்மையான மணம் உடம்பெங்கும் புளகாங்கிதத்தை உண்டாக்கியது. அந்தச் செடி எங்கு இருக்கிறது என்றறிய அவர் சுற்றுமுற்றும் பார்த்தார். ஒரு கரையான் புற்று தெரிந்தது. அதனருகில் சென்று பார்த்தபோது, ஒரு விஷ்ணு விக்கிரகம் புலப்பட்டது. ராமானுஜர் மனத்தில் மிகுந்த மகிழ்ச்சியுடன் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்.

விட்டல தேவனின் உதவியுடன் அந்த இடத்தில் ஒரு கோயில் நிர்மாணித்தார் ராமானுஜர். விஷ்ணு விக்கிரகம் கோயிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

இதே மாதிரி இன்னொரு விக்கிரகம் உண்டென்றும் தில்லி முஸ்லிம் அரசர்களின் தாக்குதலின்போது அதை எடுத்துச்

சென்று விட்டார்களென்றும் அவ்வூரைச் சேர்ந்தவர்கள் கூறினார்கள்.

ராமானுஜர் இதன் காரணமாக தில்லிக்குச் சென்றாரென்ற கதை கேட்கப்படுகிறது. முஸ்லிம் அரசரின் மகள் அந்த விக்கிரகத்தின் மீது தீவிர மோகங்கொண்டு, அதைத் தன் அந்தப்புரத்தில் வைத்துப் போற்றி வந்தாள். ராமானுஜர், முஸ்லிம் அரசருடன் வாதாடி அந்த விக்கிரத்தை மீண்டும் மைசூருக்குக் கொண்டு வந்தார். ஆனால், அதைக் கொண்டு வரும்போது, அவரிடமிருந்து அந்த விக்கிரகத்தைக் கைப்பற்ற எதிரிகள் முயற்சி செய்தார்கள். தீண்டப்படாதவர்கள் என்று ஒதுக்கப்பட்ட ஹரிஜன மக்கள் ராமானுஜருக்கு பெரும் துணையாக நின்று எதிரிகளின் முயற்சியைத் தோல்வியுறச் செய்தார்கள். ராமானுஜர் அவர்களுக்குத் தம் நன்றியைத் தெரிவிக்க, இந்தக் கோயிலில் ஹரிஜனப் பிரவேசத்துக்கு ஏற்பாடு செய்தார். ஆகவே தீண்டாமை ஒழிப்பு சட்டரீதியாக போன நூற்றாண்டில்தான் செயல்பட்டதென்றாலும், பல நூற்றாண்டுகளுக்கு முன்னாலேயே ஹரிஜனங்களுடைய ஆலயப் பிரவேசத்துக்கு வழி வகுத்தவர் ராமானுஜர் என்பது சரித்திரப்பூர்வமான உண்மை.

தொண்டனூரில் 'மோதி தலா' என்ற ஏரி இருக்கிறது. ராமானுஜர் இது உண்டாவதற்குக் காரணமாக இருந்தார். பக்கத்தில் இருக்கும் ஒரு ஆற்றிலிருந்து இந்த ஏரிக்கு நீர் கொண்டு வரும் யோசனையைத் தெரிவித்தவர் ராமானுஜ ரென்று, ஹில்டன் ப்ரௌன் என்ற சரித்திர அறிஞர் கூறி யுள்ளார்.

ராமானுஜர் முயற்சியால் மேல்கோட்டையில் 700 மடங்கள் உண்டாகின. அவருக்கு 52 சிஷ்யர்கள் ஏற்பட்டார்கள். சோழ அரசனாகிய முதற் குலோத்துங்கன் இறந்த பிறகு, மீண்டும் திருவரங்கத்துக்குத் திரும்பும் விருப்பம் ராமானுஜருக்கு உண்டாயிற்று. ஆனால், மேல்கோட்டையிலிருந்த சிஷ்யர் களுக்கு அவரை விட்டுப் பிரிய மனமில்லை.

ராமானுஜர் தாம் திருவரங்கம் செல்லவேண்டிய அவசியத்தை அவர்களுக்கு உணர்த்தினார். மைசூரில் வைஷ்ணவ மதம் நசித்துப் போகாமல் பார்த்துக் கொள்வதே அவர்கள் தமக்குச் செய்யக்கூடிய தொண்டு என்று அவர்களிடம் சொன்னார் உடையவர்.

தீண்டாமையைக் கொள்கை அளவில் எதிர்த்தார் ராமானுஜர். அவர் திருவரங்கத்தில் செய்ய முடியாத ஒரு சீர்த்திருத்தமாகிய ஹரிஜன ஆலயப் பிரவேசத்தை மைசூரில் செயலாக்கிய திருப்தி அவருக்கேற்பட்டது. ஹரிஜனங்களுக்கு அவர் அளித்த பெயர் திருக்குலத்தார்.

தில்லி முஸ்லிம் அரசரின் மகள் விஷ்ணு விக்கிரகத்தின் மீது கொண்ட அன்பின் காரணமாக, அவளுடைய உருவத்தையும் திருநாராயணபுரக் கோயிலில் பிரதிஷ்டை செய்தார் பாஷ்ய காரர். இதனால் மதங்களைக் கடந்த அவரது நல்மனதை அனைவரும் புரிந்து கொண்டனர்.

மைசூரில் அவர் பன்னிரண்டு ஆண்டுகள் இருந்தார். சோழ அரசன் இறந்தான் என்ற செய்தி கேட்டு திருவரங்கத்துக்குப் புறப்பட்ட அவர், கோயில் வழிபாட்டு முறையைத் திருத்தமாக மைசூர் வைஷ்ணவர்களுக்கு உணர்த்திவிட்டு, அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டார்.

## பகைவனுக்கு அருள்வாய் பரந்தாமா!



ராமானுஜர் திருவரங்கம் வந்தடைந்ததும், கூரேசரைச் சென்று பார்த்தார். கூரேசர் கண்களை இழந்திருந் தாலும், அவர் தம் உள் ளொளியை இழக்க வில்லை. உடையவருடைய வருகை அவருக்கு மிகுந்த உற்சாகத்தைத் தந்தது.

ராமானுஜர் கூரேசரைத் தழுவிக்கொண்டு கூறினார்: 'உம்முடைய ஸ்பரிசம் என் னைப் புனிதமாக்கியது'.

கூரேசர் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். ராமானுஜர் கூறி னார்: 'நாம் காஞ்சிக்குச் சென்று உம்முடைய கண் களைத் தரும்படி வரதரை வேண்டுவோம்!'

கூரேசருக்குத் தம்முடைய பார்வையை மீண்டும் பெற வேண்டுமென்ற அக்கறை யில்லை. ஆனால், காஞ்சி க்குச் செல்லப் போகிறோ மென்ற செய்தி அவருக்கு மகிழ்ச்சியைத் தந்தது. 'வரத ராஜஸ்தவம்' என்ற நீண்ட தோத்திரப் பாடலை அவர் இயற்றினார். கோயிலில் அதைப் பாடும்படி கூரே சரிடம் சொன்னார் உடை யவர்.

ராமானுஜர் கூரேசருடன் காஞ்சிக்குச் சென்றார்.

கோயிலில் கூரேசர், வரதராஜர் சந்நிதியில் தாம் இயற்றிய தோத்திரப் பாடலைப் பாடத் தொடங்கினார். பாடலின் பண்சுவையும் பொருளழகும் வரதராஜரை உருக்கி விட்டன. அவர் கோயில் அர்ச்சகர் மூலம் கூரேசரை அவர் வேண்டு வனவற்றைக் கேட்கச் சொன்னார்.

கூரேசருக்கு அப்பொழுது தம்மைக் காட்டிக் கொடுத்த நாலூரான் நினைவு வந்தது. உடனே அவர் இறைவனை வேண்டினார்: 'ஐயனே, நாலூரான் உங்கள் அருளுக்குப் பாத்திரமாக வேண்டும்!'

'அப்படியே ஆகட்டும்!' என்றார் இறைவன்.

அருகிலிருந்த அனைவரும் திடுக்கிட்டனர். ராமானுஜர் கூரேசரின் தோள்களைத் தொட்டுப் பரிவுடன் சொன்னார்: 'உங்களுக்கு இணை இவ்வுலகில் யார் இருக்கிறார்கள்! பகை வனுக்கும் அருள் செய்வாய் என்று இறைவனை வேண்டும் உம்முடைய பெருமையே பெருமை! வைஷ்ணவர்கள் கொண்டாட வேண்டிய தினம் இது!'

ராமானுஜருடைய மற்றைய சிஷ்யர்கள் கூரேசர் தம்முடைய கண்களைப் பெறவில்லையே என்று வருத்தம் கொண் டார்கள். ஆகவே உடையவர் கூரேசரைப் பார்த்துச் சொன் னார்: 'உங்களுடைய ஆனந்தத்தை என்னால் உணர முடி கின்றது. ஆனால், நீங்கள் பார்வையைப் பெறவில்லையே என்று மற்றவர்கள் துயரம் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் மட்டும் மகிழ்ச்சியுறுவது சுயநலம். ஆகவே நீங்கள் உங்கள் பார்வையைப் பெற மீண்டும் வரதரை வேண்டுங்கள்!'

கூரேசர் புன்னகை பூத்தார். அவர் இறைவன் முன் சாஷ்டாங்க மாக விழுந்து வணங்கினார்.

'வரதரே! உம்முடைய அழகை நான் என் புறக்கண்களால் என்றென்றும் காண அருள் புரியுங்கள்!'

வரதர் சொன்னார்: 'நீ புறக்கண்களைப் பெறுவாய். ஆனால், எங்கும் உனக்கு என் சௌந்தர்யம் மட்டும் புலனாகும்!'

ராமானுஜர் கூரேசரைத் தழுவிக்கொண்டு சிஷ்யர்களிடம் சொன்னார்: 'கூரேசர் நம்முடைய சிஷ்யர் என்பதனால் நான் மிகவும் பெருமைப்படுகிறேன். அவர் எதிரிகளுக்கும் மோட்சத்தை வேண்டினார். அவர் மூலம் நான் அனைவருக்கும் முக்தியை வேண்டுகிறேன்!'

ராமானுஜரைக் காண்பதைத் தவிர வேறு எந்தக் குறிக்கோளும் இல்லாத கூரேசர், கண்களைப் பெற்று அவரைக் கண்ட பிறகு, இறப்பதற்குத் தயாராக இருந்தார். அவருக்குத் தளர்ச்சி ஏற்பட்டது. படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியாத நிலை அவருக்கு உண்டாயிற்று. விரைவில் அவர் இறைவன் அடி சேரப் போகிறாரென்று உணர்ந்தார் ராமானுஜர். ஆகவே அவர் எல்லா சிஷ்யர்களையும் அழைத்துக் கூறத் தொடங்கினார்: 'கூரேசர் நமக்கு முன்னால் திருமாலைச் சென்று அடையப் போகிறார். இது அவர் செய்த புண்ணியம். நாம் இவ்வுலகில் செய்ய வேண்டிய காரியங்கள் இன்னும் பலவுள்ளன என்பது இறைவனின் திருவுள்ளம் என்று இதனால் தெரிகின்றது. கூரேசர் விட்டுச் செல்லும் அவர் புத்திரனாகிய பராசரன், தந்தைக்கு இணையான தியாக உணர்வும் பக்திக் கூர்மையுமுடையவன். வைஷ்ணவத்தின் எதிர்காலம் இவன் கையில் இருக்கிறது!'

இவ்வாறு சொல்லிக்கொண்டே பராசரனுக்கு பூமாலைகளால் முடி சூட்டினார் ராமானுஜர். அங்கிருந்த அனைவரும் பராசரனுக்கு வாழ்த்துக் கூறினார்கள்.

கூரேசர் முகத்தில் ஒளி பரவியது. ராமானுஜர் பாதங்களைப் பற்றிக்கொண்டே இறைவனிடம் சேர்ந்தார் கூரேசர்.

கூரேசரின் ஈமக் காரியங்கள் வெகு விமரிசையாக நடந்தேறின. ஆயிரக்கணக்கான ஸ்ரீ வைஷ்ணவர்கள் எல்லா திசைகளிலிருந்தும் வந்து அஞ்சலி செலுத்தினார்கள். ஏழைகளுக்கும், உடல் ஊனமானவர்களுக்கும் உணவு பரிமாறப்பட்டது.

கூரேசரின் மறைவு, ராமானுஜருக்கு மிகுந்த துயரத்தைத் தந்தது. ஆனால், அதை அவர் வெளிக்காட்டிக் கொள்ள வில்லை. திருவரங்கத்தை விட்டு இதற்குப் பிறகு அவர் நீங்கவில்லை.

ஒரு நாள் ராமானுஜ மடம் இருந்த வீதி வழியே ரங்கநாதரின் புறப்பாடு நிகழ்ந்தது. ராமானுஜரும் அவர் சிஷ்யர்களும், மடத்தை விட்டு வெளியே வந்து வணங்கினார்கள். ஆனால் வடுகநம்பி மட்டும் வரவில்லை. ராமானுஜர் உள்ளே சென்று பார்த்தார். வடுகநம்பி மடப்பள்ளியில் இருந்தார். ராமானுஜர் சிஷ்யரைப் பார்த்துக் கேட்டார்: 'நீங்கள் ஏன் ஸ்வாமி தரிசனம் செய்ய வரவில்லை?' வடுகநம்பி புன்னகையுடன் பதில் சொன்னார். 'உங்களுக்காகப் பால் காய்ச்சிக் கொண்டிருந் தேன். உங்களுக்குச் செய்யும் தொண்டே இறைவனுக்குச் செய்யும் தொண்டு.'

சிஷ்யர்களும் குருவைப் போலவே எளிய வாழ்க்கையும், அடக்கமான சுபாவமும் மேற்கொள்ளக் காரணமாயிருந்தார் ராமானுஜர். வைஷ்ணவ சம்பிரதாயத்தில் ஓர் உண்மையான வைஷ்ணவனை ஒரு கொக்கோடும், சேவலோடும், உப் போடும் ஒப்பிட்டுப் பேசுவார்கள். உறுமீன் வருமளவும் காத்திருக்கும் கொக்கைப் போல், அல்ப விஷயங்களைப் பற்றிக் கவலைப்படாமல், ஸத் விஷயங்களை மட்டும் கிரஹித்துக் கொள்வான் ஓர் உண்மையான வைஷ்ணவன். குப்பை மேட்டில் உணவை மட்டும் நாடும் சேவலைப் போல், வேத சாஸ்திரங்களில் சாரத்தை மட்டும் உணர்பவன் ஒரு உண்மையான வைஷ்ணவன். உப்பில்லாத உணவில்லை. சமூகத்துக்கு உப்புப் போன்றவன் ஓர் வைஷ்ணவன். அவன் செய்யும் தொண்டுகளே அதற்கு ஆதாரம்.

பாகவத சமூகத்தில் உயர்வு தாழ்வு இல்லை. நம்பிள்ளை ஒரு சமயம் தமது சிஷ்யராகிய சிவக்கரை பிள்ளையோடு, அவர் கைகளைப் பற்றியவாறு சென்று கொண்டிருந்தார். வழியில் ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் கால்களை நீட்டிய நிலையில் படுத்துக் கொண்டிருந்தார். அவருக்கு மிகவும் அசதி. எழுந்திருக்க

முடியவில்லை. சிவக்கரைப் பிள்ளை அவரைப் பார்த்து கோபத்துடன் 'எழுந்திரும்.. பெரியவர் வருகிறார்' என்று சீறினார். நம்பிள்ளை உடனே சிவக்கரைப் பிள்ளையின் கைகளை விட்டுவிட்டுத் தாம் தனியே நடக்கலானார். குரு கோபம் கொள்ள என்ன காரணம் என்று சிவக்கரைக்குப் புரியவில்லை. அவர் குருவின் பாதங்களில் விழுந்து காரணத்தை வேண்டினார். நம்பிள்ளை சொன்னார்: 'பாகவத சமுதாயத்திலே யார் உயர்ந்தவர்? யார் தாழ்ந்தவர்? வேறுபாடு பாராட்டிய உங்களை உண்மையான வைஷ்ணவன் என்று சொல்ல முடியுமா?'

பெண்களுக்கு, ஆண்களுக்கு நிகரான சம அந்தஸ்து அளித்து அவர்களையும் சிஷ்யர்களாக ஏற்றுக்கொண்ட முதல் சமயத் தலைவர் ராமானுஜர். வைஷ்ணவம் திருமகளையும் திருமா லுடன் இணைத்துப் பூஜிக்கின்றது. இப்பெண்கள் தத்துவ விவாதங்களில் பங்கு கொண்டனர்.

கூரேசர் மனைவி ஆண்டாள், நிரம்பப் படித்தவர். ஸ்ரீ பாஷ்யம் எழுதப்பட்டபோது கூரேசர் தம் மனைவியுடன் இதுபற்றி விவாதிப்பதுண்டு. ஆண்டாள், ரங்கநாதப் பெருமாளின் மீது குற்றம் கண்டதாகக் கதையுண்டு. ஒரு சமயம் நல்ல மழை பெய்தது. கூரேசரால் கோயிலுக்குச் சென்று பிரசாதம் வாங்க முடியவில்லை. ஆகவே, அன்றிரவு அவர் பட்டினி கிடக்க உத்தேசித்தார். அப்பொழுது கூரேசர் மனைவி கோயில் பக்கம் நோக்கி, 'உன் பக்தன் பட்டினி கிடக்கும்போது உனக்கு மட்டும் என்ன உணவு?' என்றாராம். சிறிது நேரம் கழித்து, கூரேசர் வீட்டு வாசற்கதவு தட்டப்பட்டது. ஆண்டாள் சென்று கதவைத் திறந்தாள். கோயில் அர்ச்சகர் பிரசாதத்துடன் நின்று கொண்டு இருந்தார்.

உறங்காவில்லியின் மனைவியாகிய பொன்னாச்சியின் பதிபக்தியும், இறைபக்தியும் எல்லாருடைய உள்ளத்தையும் கவர்ந்த விஷயம். ராமானுஜர் இந்தத் தம்பதிகள் தம்மீது கொண்டிருந்த விசேஷ அன்பைப் பற்றி மற்றவர்களிடம் அடிக்கடி கூறுவதுண்டு.

கொங்கு தேசத்திலிருந்து வந்திருந்த கொங்கு பிராட்டியார், சிறிது காலந்தான் திருவரங்கத்தில் தங்குவது என்று வந்திருந் தாலும், ராமானுஜர் மீது கொண்ட ஈடுபாட்டின் காரணமாக, நீண்ட நாட்கள் அங்கு தங்கினார். வெகு தூரத்திலிருந்து பல பெண்மணிகள் ராமானுஜ மடத்தில் வந்து தங்கியிருந்தார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் திருவண் பரிசாரத்து அம்மை, திருவெட்டாற்று அம்மை, திருவனந்தபுரத்து அம்மை ஆகியோர்.

ராமானுஜர் தம்மால் குற்றமே செய்ய முடியாதென்று நினைத்தது கிடையாது. ஸ்ரீ பாஷ்யம் சொல்லும்போது, கூரேசர் தம்முடைய தவற்றை எடுத்துக் காட்டிய சமயம், அதை அவர் ஏற்றுக்கொண்டார். இன்னொரு சமயம் அவர் திருப் புளிங்குடியில் ஒரு பெண்ணைப் பார்த்துத் திருக்குருகூர் அருகிருந்து எவ்வளவு தூரம் இருக்கிறதென்று வினவிய போது, அப்பெண் 'ஆழ்வார் பாடலை நீர் அறிவீரோ?' என்றாள். திருப்புளிங்குடியில் இருந்து கூப்பிடு தூரத்தில் திருக்குருகூர் இருக்கிறது என்று ஆழ்வார் பாடியுள்ளார். உடனே ராமானுஜர் சிஷ்யர்களை நோக்கிப் 'பாருங்கள், பாண்டிய நாட்டில் ஒரு சாதாரண பெண்ணுக்குக்கூட என்னால் சமாதானம் சொல்ல முடியவில்லை!' என்றார்.

உண்மையான வைஷ்ணவன் மற்றவர் மீது அனுதாபம் கொள்வதோ அல்லது தான் அனுதாபத்துக்குரியவனாகவோ என்றும் நினைத்ததில்லை என்று சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்தார் ராமானுஜர். கருடாழ்வார் ஒரு சமயம் அந்நிய தேசத்துக்குச் சென்றபோது அங்கு ஒரு ஸ்ரீ வைஷ்ணவப் பெண்மணியைக் கண்டார். ஒரு அந்நிய தேசத்தில், வைஷ்ணவர்களே இல்லாத நாட்டில் இந்தப் பெண்மணி இருக்கின்றாளே என்று அவர் அனுதாபம் கொண்டார். உடனே அவருடைய சிறகுகள் உதிர்ந்தன. கருடாழ்வாருக்கு இது ஏன் ஏற்பட்டது என்று புரியவில்லை. இறைவன் சொன்னார்: 'ஒரு உண்மையான வைஷ்ணவன் மற்றவர் களிடம் இருந்து அனுதாபத்தையோ அல்லது தான்

உயர்ந்தவன் என்ற காரணத்தினால் மற்றவர்கள் மீது அனுதாபம் கொள்வதோ கிடையாது!'

மைசூரை விட்டுத் திரும்ப திருவரங்கத்தை வந்தடைந்ததும் கோயிலில் பல சீர்த்திருத்தங்களைச் செய்ய முயன்றார் ராமானுஜர். மேல் கோட்டையில் அவர் எது செய்தாலும் மற்றவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். ஆனால், திருவரங்கத்தில் அவருக்கு எப்பொழுதும் எதிர்ப்பு இருந்துகொண்டே வந்திருக்கிறது. கோயில் அர்ச்சகர்கள் அவரை எப்படியும் ஒழித்துவிட முயற்சி செய்தார்கள். மேல்கோட்டையில் அவர் செய்த மாபெரும் புரட்சியாகிய, ஹரிஜன ஆலயப் பிரவேசத்தை அவரால் திருவரங்கத்தில் செயலாற்ற முடியவில்லை. ஆனால், அவர் வைதிக சமயத்தில் பல வழக்கு ஒழிந்த பழக்கங்கள் மறைந்து போவதற்குக் காரணமாக இருந்தார் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

## மூன்று விருப்பங்களும் நிறைவேறியது



ராமானுஜர் நூற்றிருபது வயது வரை வாழ்ந்தார். மைசூரிலிருந்து வந்த பிறகு, இருபது வருஷங்கள், வைணவ சமயம் நிலைநிற் பதற்கான முயற்சிகளை அவர் தளராமல் மேற் கொண்டார். கூரேசரின் மறைவு அவருக்கு அதிர்ச்சி தந்தது என்பது வாஸ்தவம். ஆனால், கணவன் மறைவில் மிகவும் சோர்ந்திருந்த ஆண்டாளை ஆறுதல் கூறித் தேற்றினார் உடையவர். அவளும் கூரேசர் மறைந்த பிறகு, வெகு நாட்கள் வசிக்கவில்லை.

உறங்காவில்லி இறந்தார். ராமானுஜர் அவரை மரியாதைகளுடன் எடுத்துச் செல்வதற்காக ஒரு பூப் பல்லக்குத் தயாரிக்கச் சொன்னார்.

பக்தர்களும் அந்தணர்களும் உறங்காவில்லியின் பூத வுடலைப் பல்லக்கில் எடுத்துக்கொண்டு போனார் கள். பொன்னாச்சியும் அதிர்ச்சியில் இறந்து போனாள். அவளுடலும் உறங்காவில்லியின் உடலுக் கருகே வைக்கப்பட்டு ஈமக் காரியங்கள் நடந்தேறின.

தம்முடைய முடிவும் நெருங்கிக் கொண்டிருக்கிறது என்று உணர்ந்தார் ராமானுஜர். ராமானுஜ தரிசனம் நாடெங்கும் பரவி, ஆயிரக்கணக்கான மக்கள் அவரைக் காண திருவரங்கத் துக்குத் திரண்டு வந்து கொண்டிருந்தனர். வைஷ்ணவ மதம் பொதுமக்களின் ஆதரவு பெற்ற ஒரு இயக்கமாக மாறியது.

ஆளவந்தாரின் மூன்று விருப்பங்களையும் அவர் நிறைவேற்றி விட்டார். பிரம்மசூத்திரங்களுக்கு விசிஷ்டாத்வைத மதத்தின் அடிப்படையில் பாஷ்யம் எழுதிவிட்டார். கூரேசருடைய முதல் புத்திரருக்குப் பராசரன் என்ற பெயரைச் சூட்டி ஆள வந்தாரின் மூன்றாவது விருப்பமாகிய நம்மாழ்வார் பெயரை நிறுவ, தம் சிஷ்யரை (நம் பிள்ளையைத் திருக்குருகைப் பிள்ளான் என்று) அழைத்தார்.

பிள்ளானை, நாலாயிரத்துக்கு வியாக்கியானம் எழுதப் பணித்தார். வியாக்கியானத்தைப் படித்து மகிழ்ந்து அதற்கு, 'பகவத் விஷயம்' என்று பெயர் வைத்தார். 'ஸ்ரீ பாஷ்யத்துக்கு நிகரான பெருமையுடையது பகவத் விஷயம்' என்றார் அவர்.

ராமானுஜர் சிதம்பரம் சென்று, இரண்டாம் குலோத்துங்கனால் கடலில் தூக்கி எறியப்பட்ட திருமால் விக்கிரகத்தை மீண்டும் கோயிலில் பிரதிஷ்டை செய்தாரென்று கூறப்படுகிறது.

ராமானுஜர் வைஷ்ணவ மதத்தைப் பரப்ப எழுபத்துநாலு தலைவர்களை நியமித்தார். ஸ்ரீ பாஷ்யத்தைப் ப்ரவசனம் செய்யும் பொறுப்பை திருக்குருகைப் பிள்ளான், நடாதூர் ஆழ்வான், கிடாம்பி ஆச்சான், முதலியாண்டான் ஆகி யோரிடம் ஒப்புவித்தார். திருக்குருகைப் பிள்ளான் நாலாயிர வியாக்கியானத்தை விரிவாக அனைவருக்கும் கற்றுக் கொடுக்கும் மற்றொரு பொறுப்பையும் ஏற்றார். அவருக்கு 'பாஷ்ய பகவத் விஷய உபய சிம்மாசனனாதிபர்' என்ற பட்டப்பெயர் ஏற்பட்டது.

கூரேசருடைய இரு புத்திரர்களாகிய பட்டர், ஸ்ரீராமப் பிள்ளை ஆகியோருக்கு வேதாந்தத்தில் பிரத்யேகப் பயிற்சி அளிக்கும் படி 'எம்பாரை'ப் பணித்தார்.

ஆளவந்தாரைப் போல் கருவிலே திருவுடையவர் பட்டர். சிறுவராக இருந்தபோது ஒரு சமயம் தெருவிலே விளையாடிக் கொண்டிருந்தார். அப்பொழுது ஆணவம் மிகுந்த ஒரு அறிஞர் தாம் விருது பெற்றவர் என்று சொல்லிக் கொண்டு வந்தார். பட்டர் அவரை யாரென்று கேட்டார். அறிஞர் தாம் தர்க்க சாஸ் திரத்தில் சிறந்தவரென்றும் தன்னை அதுவரை எவரும் வாதத் தில் முறியடித்ததில்லை என்றும் கூறினார். பட்டர் உடனே கீழே கிடந்த மண்ணை ஒரு கை நிறைய வைத்துக்கொண்டு, 'மண் எவ்வளவு அளவு இருக்கும்?' என்று அவரைக் கேட்டார். அறிஞர் பதில் சொல்லமுடியாமல் விழித்தார். பட்டர் புன்னகையுடன் கூறினார்: 'கையளவு என்று சொல் வதுதானே? இதுகூடத் தெரியவில்லை உங்களுக்கு. விருது ஒரு கேடா?' அறிஞர் தம் தோல்வியை ஒப்புக்கொண்டு சிறு வராகிய பட்டரை வாழ்த்தினார். ராமானுஜர் இந்தச் செய்தியைக் கேட்டதும் பட்டரைக் கூப்பிட்டனுப்பி ஆசீர் வாதம் செய்தார். பட்டருக்கு நல்ல எதிர்காலம் இருப்பதாகக் கூறினார் உடையவர். அது உண்மையாயிற்று. ராமானுஜருக்கு அடுத்த வைஷ்ணவத் தலைவர் ஆனார் பட்டர்.

ராமானுஜர் தாம் இறப்பதற்கு முன்னால் தம்முடைய சிஷ்யர் களை அழைத்தார். எம்பார் மடியில் தலையை வைத்துக் கொண்டு, கால்களை வடுகநம்பியின் மேல் போட்டுக் கொண்டார். பிறகு அவர் பேச ஆரம்பித்தார்: 'நான் இறந்து போனால் ஒருவரும் என் மறைவு குறித்து அழக்கூடாது. உடம்புதான் அழிகின்றது. ஆத்மாவுக்கு அழிவு கிடையாது. மனிதன் உலகில் தனியாக இல்லை. அவனுக்குக் கடவுள் என்றும் துணை இருக்கிறார். கடவுளை மறந்தவர்கள் தங்களையும் மறக்கிறார்கள்.'

இவ்வாறு சொல்லிய ராமானுஜர் அப்பொழுதுதான் 'எண்பத் திரண்டு வார்த்தைகளை' அருளிச் செய்ததாக வைஷ்ணவ சம்பிரதாய வழக்கு.

எண்பத்திரண்டு வார்த்தைகளாவன: 'ஸ்ரீ வைஷ்ணவனையும் வணங்குதல் வேண்டும். அவர்களுடைய உபதேசங்களில்

நம்பிக்கை வைக்க வேண்டும். புலனுணர்வுக்கு அடிமையாகக் கூடாது. லௌகீக அறிவுக்கு எல்லையுண்டு. ஆச்சார்யார் களுடைய போதனைப்படி நடத்தல் வேண்டும். குருவின் கடாட்சம் விழுந்தால், புலனுணர்வுகள் உனக்குத் தொந்தரவு தரது. குருவின் தயவு கொண்டு உயர்ந்த ஒருவன் ஆசைக்கு அடிமையாக மாட்டான். பக்தர்களின் திருநாமங்களையும் இறைவரின் திருநாமங்களையும் ஒன்றுசேர நினைத்தல் வேண்டும். பாகவதர்களை வணங்குகின்றவர் இறைவன் அருளுக்குச் சீக்கிரம் பாத்திரமாவார். உண்மையான வைஷ்ண வனுக்குச் சுயநலம் கிடையாது. இறைவனையும் ஆழ்வார் பாசுரங்களையும் ஆச்சாரியார் உபதேசங்களையும் சேவிக்க தினந்தோறும் ஒரு மணி நேரமாவது ஒதுக்கல் வேண்டும். இறைவனிடம் சரணடைந்தவர்களை நாடிச் செல்ல வேண்டும்.

தெய்வ நம்பிக்கை இல்லாதவர்களோடு சேரக்கூடாது. புலனுணர்வே சொர்க்கம் என்று நினைக்கின்றவர்களைப் பார்க்கவே கூடாது. அர்ச்சாவதாரத்தை அலட்சியமாக நினைப்பவன் நரகத்துக்குப் போவான். குருவை சாதாரண மனிதனாக நினைப்பவனுக்கு உயர்வே கிடையாது. புண்ணிய தீர்த்தத்தை வெறும் நீராக நினைப்பவனுக்கு மோட்சம் இல்லை. தெய்வ மந்திரங்களை வேறு ஓசைகளின் அடுக்காகக் கருதுபவனுக்கு முக்தி என்றுமே கிட்டாது. இறைவனை சில்லறைத் தெய்வங்களில் ஒருவனாக நினைப்பவனுக்கு நல்ல கதி எந்நாளுமே இல்லை. கடவுளிடம் சரணடைந்து விட்டால் எதிர்காலத்தைப் பற்றி நினைக்கவே வேண்டாம்.

கடமையைக் கடவுள் பணியாகக் கொண்டு செயலாற்ற வேண்டும். ஸ்ரீ பாஷ்யத்தைப் படிக்க வேண்டும். படிப்பதோடு மட்டுமல்லாமல், மற்றவர்களுக்குச் சொல்லித் தருதல் வேண்டும். ஆழ்வார்ப் பாசுரங்களையும் குறிப்பாகத் திருவாய்மொழியைப் படிக்க வேண்டும். இதைச் செய்ய முடியாவிட்டால், இறைவனுக்கும் அவனுடைய தொண்டர் களுக்கும் சேவை செய்தல் வேண்டும். இதுவும் முடியா

விட்டால், யாதவ கிரிக்குச் சென்று குடிலை அமைத்துக் கொண்டு வாழ வேண்டும். இதுவும் இல்லாவிட்டால் இருக்கும் இடத்திலேயே இருந்துகொண்டு த்வய மந்திரத் தைத் தியானித்துக்கொண்டு இருக்கவேண்டும். இதுவும் முடியாவிட்டால், ஒரு ஸ்ரீ வைஷ்ணவனை நாடி, அவன் உபதேசத்தின்படி வாழவேண்டும். இவ்வுலகில் ஸ்ரீ வைஷ்ண வர்கள்தாம் உங்களுக்கு நண்பர்கள். தெய்வ நம்பிக்கை இல்லாதவர்கள் உங்களுக்கு எதிரிகள். பக்தர்களை நாடி வாழ வேண்டும். நல்ல எண்ணம் நல்ல செயலுக்கு வழி வகுக்கும். பிறரிடம் தவறு கண்டுபிடிக்கக்கூடாது. உலகில் எவரும் குற்றமற்றவராக இருக்க முடியாது'.

இவ்வாறு சொல்லிக்கொண்டே இறைவனடி. எழுந்தருளி னார் ராமானுஜர். சிஷ்யர்கள், குரு அவர்களை அழக்கூடாது என்று கட்டளையிட்டிருந்தாலும், துயரத்தை அடக்க முடியா மல் அழுதார்கள்.

திருவரங்கத்திலும் அதைச் சுற்றிலுமிருந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் அங்குக் கூடினர். வேத மந்திரங்களும், ஆழ்வார்ப் பாசுரங்களும் ஒலித்தன. ராமானுஜர் பூதவுடல் கோயிலுக்குள் எடுத்துச் செல்லப்பட்டு, ஈமக் காரியங்கள் நடந்தேறின. கோயிலுக்குள் அடக்கம் செய்யப்பட்ட ஒரே சநாதன மதத் தலைவர் ராமானுஜர்தாம்.

ராமானுஜர் விக்கிரகம், திருப்பதி, காஞ்சி, ஸ்ரீபெரும்புதூர் ஆகிய இடங்களில் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

ராமானுஜருடைய தத்துவம் அவருக்குப் பிறகு வந்தவர் களுடைய கருத்துக்களுக்கு அஸ்திவாரமிட்டது. ராமானந்தர், சைதன்யர், ராமதாஸ் ஆகியோர் பிற மதத் தாக்குதல்களை ராமானுஜர் கண்ட பக்திநெறி மூலம் சமாளித்தனர்.

## சொல்லும் செயலும்



ஆஜானுபாகுவாக ஆறடி உயரமும், தோற்றப்பொலிவும் கொண்ட ராமானுஜர் தலைவர்க்குரிய அருங்குணங்கள் யாவும் நிரம்பப் பெற்றவர். ஆளவந்தார் முதன்முறையாகக் காஞ்சியில் அவரைத் தொலைவில் கண்டபோது வைணவத்தின் எதிர்காலம் இவர் கையில் இருக்கிறது என்று தீர்க்க தரிசனத்துடன் சொன்னார். ஆளவந்தார் விரும்பியவற்றை ராமானுஜர் பூர்த்தி செய்தார்.

வைணவம் ஒரு வாழும் சமயமாக, பிரபல இயக்கமாக அவர் காலத்தில் மாறியது.

அவர் காலத்தில் வழங்கிய தத்துவங்கள் அனைத்தையும் கரை கண்டார் ராமானுஜர். யாதவப் பிரகாசரிடம் இளமையில் அத்வைதம் பற்றித் தெளிந்தார். ஸ்ரீ பாஷ்யத்தைப் படித்தால் அவருடைய பலதிறப்பட்ட தத்துவப் புலமை புலனாகும். ஸ்ரீ பாஷ்யம் எழுதுவதற்கு முன்னால் தம்மை அதற்குத் தகுதியுடையவராகச் செய்ய எல்லாத் துறைகளிலும் தேர்ச்சி பெற்று அவற்றின் எல்லை

எட்டினார் ராமானுஜர். யாதவப் பிரகாசருடன் மாறுபட்டாலும் அவர்மீது பகைமை பாராட்டவில்லை. யாதவர், கடைசியில் ராமானுஜரை வழிகாட்டும்படியாக அடைந்தபோது, அவரை ஏற்றுக்கொள்ள மறுக்கவில்லை உடையவர்.

பொறுமை என்ற பண்பை அணிகலனாகக் கொண்டவர் ராமானுஜர். வாதத்தில் சினம் கொள்வதற்குப் பல சந்தர்ப் பங்கள் ஏற்பட்டாலும், தம்மை அடக்கிக்கொண்டு வாதத் திறமையோடு கூடிய தம்முடைய இனிய சுபாவத்தினால் எதிரிகளைத் தம் வழிக்குக் கொண்டுவந்தார். வெற்றிபெற வந்தவர்கள் ஆட்கொள்ளப்பட்டார்கள்.

சொல்வதின் மதிப்பு செயலில்தான் என்று பரிபூரணமாக உணர்ந்தவர் ராமானுஜர். தாமும் தன்னுடைய உபதேச நெறியில் நின்று வைணவத்தை ஒரு பொதுஜன இயக்கமாக மாற்றிய முதல் சமயத் தலைவர் ராமானுஜர்.

ராமானுஜருக்கு ஜாதி சமய நம்பிக்கை கிடையாது. இதுபற்றி ஒரு கதை இருக்கிறது.

திருவரங்கத்தின் புறப்பகுதியில் திருக்குலத்தைச் (ஹரிஜன வகுப்பு) சேர்ந்த ஒருவர் வசித்து வந்தார். அவர் இறைவன் திருநாமத்தைச் சொல்லிச் சொல்லி ஆழ்வார் பாசுரங்களை இனிமையாகப் பாடி மகிழ்வது வழக்கம்.

ஒருநாள் ராமானுஜர் ஆற்றில் நீராடிவிட்டு வந்தபோது, சிஷ்யர்களை முன்னே போகச் சொல்லிவிட்டு, அந்தப் பக்தனுடைய குடிசைக்குச் சென்றார். அவரைப் பாடச் சொல்லிக் கேட்டு மூன்று மணி நேரம் அவருடன் பேசிக் கொண்டிருந்தார் ராமானுஜர்.

ராமானுஜர் மிகச் சிறந்த மனோதத்துவ அறிஞர். பொன்னாச்சி மீது தீராக் காதல்கொண்ட உறங்காவில்லியின் பிரேமையை இறைவன்மீது பக்தியாக மாற்ற முடியுமென்று அவர் சொன்னார். 'யாருக்கு அன்பு செலுத்தத் தெரிகின்றதோ, அவர் தான் உண்மையான பக்திமான்' என்பது அவர் முடிவு!

நம்பிக்கையும் இதயப்பூர்வமான ஈடுபாடும்தான் ஒரு சமயத்துக்கு அடிப்படை என்பதை நன்குணர்ந்தார் ராமானுஜர். இறைவனைக் கோட்பாட்டினின்றும் ஒதுங்கி விட்ட எந்தச் சமயமும் காலத்தை வென்று நின்றது கிடையாது. இறைவழிபாட்டில் அழகுணர்ச்சியையும் இணைத்து, கடவுளைப் புவன சுந்தரனாகப் பாவித்து வணங்கிய ராமானுஜர் நெறி, மக்களின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தது. சத்தியம், ஒழுக்கம், அழகு ஆகிய மூன்றையும் ஒன்று சேரக் கண்ட தத்துவமே ராமானுஜரின் சமய தரிசனம்.

ஆழ்வார் இறைவனை ஆனந்தத்தின் எல்லையாகக் கண்டார். பக்தர்கள் பலவிதமான இன்பங்களை வெவ்வேறு நிலைகளில் அனுபவித்தாலும் இறைவனுடன் ஒன்றும் பேரின்பத்தையே உண்மையான அனுபவமாக அவர்கள் கருதினார்கள்.

இறைவன் மனித சமுதாயத்தின் மீதுள்ள எல்லையற்ற அன்பின் காரணமாக அவதாரம் எடுக்கிறான். ஆழ்வார்கள் மனித அவதாரங்களாகிய ராமனுடைய அவதாரம் பற்றியும், கிருஷ்ணன் லீலைகள் பற்றியும் நெஞ்சுருகப் பாடியிருக்கிறார்கள். ஆண்டாள், கிருஷ்ணனைத் தவிர வேறு எவரையும் மணப்பதில்லை என்று உறுதிபூண்டு, இறைவனுடன் ஒன்றி விட்ட பாவத்தை அற்புதமாகப் பாடியிருக்கிறாள்.

ராமானுஜர், தம்முடைய சிஷ்யர்கள் யாவரும் ஆழ்வார்களுடைய பாசுரங்களைப் படித்தாக வேண்டுமென்று வற்புறுத்தினார். அவரே பல சமயங்களில் நாலாயிரத்தைச் சேவித்துக்கொண்டே இருப்பது வழக்கம்.

கர்மத்தை வற்புறுத்தியது சநாதன தர்மம். ஆனால் ராமானுஜர், ஒருவன் எந்த ஜாதியில் பிறந்திருந்தாலும், இறைவனுடைய லீலைகளில் மனம் ஈடுபட்டால் அவனருளைப் பெறுவதற்கு உரிமையுண்டு என்று நம்பினார். திருப்பாணாழ்வார் வரலாறு அவர் உள்ளத்தைத் தொட்டது. அதை அவர் அடிக்கடி சொல்வது வழக்கம். ஆழ்வார்கள் பாசுரங்களையும் வரலாற்றையும் எல்லாரும் அறிய அவர் வழிவகுத்தார்.

## இரண்டு பிரிவான வைணவம்



ராமானுஜருக்கு முன்பிருந்த சமயத் தலைவர்கள் கற்பதை மட்டும் வற்புறுத்தினார்கள். ராமானுஜர் கற்பதும் அதற்குத் தக நிற்பதும் மிக அவசியமென்று நிலைநாட்டினார். 'அறத்தின் வழியே நிற்றல் கர்மம்' என்று உபதேசம் செய்தார் உடையவர். கர்மாவுக்குக் காரணம் அவித்தையல்ல என்பது அவர் வாதம். செயலுக்கு வழிகாட்டி ஞானம் என்றும், சமூகப் பணி உணர்ந்த கர்ம நெறி வாழ்க்கை அர்த்தமுள்ளது என்றும் அவர் நிறுவினார்.

ராமானுஜர் தமக்குப் பின்பும் வைணவ இயக்கம் தழைத்து நிற்க, அதை நிர்வகிக்கும் பொறுப்பை எழுபத்தினான்கு சிஷ்யர்களிடம் ஒப்புவித்தார்.

ஸ்ரீசுத்தி சிம்மாசனத்தின் பொறுப்பைப் பராசரப் பட்டர் ஏற்றார். உடையவரின் பிரதம சிஷ்யரும், ஆசிரியரின் கட்டளையை மேற்கொண்டு, திருவாய் மொழிக்கு 'ஆறாயிரப்படி' வியாக்கியானம் அருளியவருமான திருக்குருகை பிள்ளான், ஸ்ரீபாஷ்யத்தையும்,

ஆழ்வார்களின் பாசுரங்களை மக்களிடையே பரப்பும் பணியை ஏற்றுக்கொண்டார். ராமானுஜரின் இரு கண்கள் தமிழிலிருந்த ஆழ்வார்களின் அருளிச்செயல்களும், சம்ஸ் கிருதத்திலிருந்த வேதங்களும். இவை இரண்டும் மக்களைச் சென்றடைய வேண்டும் என்பதுதான் அவர் குறிக்கோள் என்பதை நன்கு உணர்ந்திருந்த அவர் சிஷ்யர்கள் அதை நிறை வேற்றும் வழியில் வேண்டியவற்றைச் செய்தார்கள்.

நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்துக்கு மணிப்பிரவாள நடையில் (மணியும், பவளமும் கோர்த்தது போன்று, தமிழும் சம்ஸ்கிருதமும் கலந்த நடை) வியாக்கியானங்கள் எழுதப் பட்டது குறித்து ஒரு சுவாரஸ்யமான கதை உள்ளது.

ராமானுஜருக்கு ஆழ்வார் பாடல்களிலிருந்த ஈடுபாட்டை யறிந்து, அவற்றுக்கு அவர் உரை செய்தருள வேண்டுமென்று அவருடைய பக்தர்கள் அவரைக் கேட்டபோது ராமானுஜர் கூறினார்: ‘நான் உரை எழுதுவதில் ஒரு பிரச்னை இருக்கிறது. என் தலைமையை நீங்கள் ஏற்றுக் கொண்டிருப்பதினால், நான் எழுதுவதுதான் ஆழ்வார் பாடல்களுக்கு அர்த்தத்தின் எல்லை என்று நீங்கள் தவறாகக் கொள்ளக்கூடும். இப்பாடல்களுக்குப் பொருள், காலத்துக்கு ஏற்பவும், சொல்லுகின்றவர்களின் ஆற்றலுக்கேற்பவும் விரிந்து கொண்டே போகும். அதுதான் நியதி. நான் எழுதியதற்குப் பிறகு உரைகள் எழுதப்பட வில்லை என்ற நிலை ஏற்பட்டுவிடக் கூடாது.’

ராமானுஜர் நினைத்ததற்கேற்ப, ஆழ்வார்களுடைய பாசுரங் களுக்குத் தொடர்ந்து வியாக்கியானங்கள் எழுதப்பட்டபடி இருந்தன. பிள்ளானுக்குப் பிறகு, நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை ஆகியோரும் இன்னும் மற்றவர்களும் நாலாயிரத்துக்கு உரை எழுதியுள்ளனர்.

ராமானுஜருக்குப் பிறகு வந்த வைணவத் தலைவர்களிலே குறிப்பிடத்தக்கவர்கள் பிள்ளைலோகாச்சாரியார், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் ஆகியோர்.

பிள்ளைலோகச்சாரியார் கி.பி.1264லிருந்து கி.பி.1369 வரை இருந்தார். இவர் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் புதல்வர். பிரும்மச்சாரியாகவே இருந்து, தமது வாழ்க்கையை வைண வத்துக்காகவே அர்ப்பணித்த மகான். ராமானுஜர் உள்ளத்தை நன்கு அறிந்து வைத்திருந்த பெரியார்களில் இவர் குறிப்பிடத் தக்கவர் என்று சொல்லவேண்டும். வைணவத்துக்கு சாதி ஏற்றத் தாழ்வுகள் இல்லை என்ற ராமானுஜர் கொள்கைக்கு ஏற்ப, பிள்ளைலோகாச்சாரியாருடைய தலைமைச் சிஷ்யர். விளாஞ்சோலைப் பிள்ளை என்பவர் தாழ்ந்த வகுப்பினர். அவர் எழுதிய 'சப்தகாதை' என்ற நூலுக்கு பிள்ளை லோகாச்சாரியார் மணிப்பிரவாள நடையில் வியாக்கியானம் அருளியுள்ளார். அவர் எழுதிய கிரந்தங்களில், உண்மையான வைணவன், சாதிப் பாகுபாட்டுக்கு அப்பாற்பட்டவன் என்பதை, ராமானுஜர் கருத்தை ஒட்டி வற்புறுத்துகிறார்.

வேதாந்த தேசிகர் (கி.பி.1268-1369) 'கருவுலேயே திருவுடைய வராக'ப் பிறந்தார். இருபது வயதிலேயே இவருக்கு, 'சர்வ தந்திர சுதந்திரர்' என்ற விருது அறிஞர்களால் வழங்கப் பட்டிருக்கிறது. இவர் சமயத்தின் எல்லாத் துறைகளையும் கற்று எல்லை கண்ட பேரறிஞராக திகழ்ந்தார். இவர் தமிழிலும், சம்ஸ்கிருதத்திலும், விசிஷ்டத்வைதக் கோட்பாடு களை விளக்கிப் பல நூல்களை இயற்றியுள்ளார்.

வைணவத் தத்துவ தரிசனம் குறித்து இவருக்கும் பிள்ளை லோகாச்சாரியாருக்கும் சில கருத்து வேறுபாடுகள் தெரி கின்றன. பிள்ளை லோகாச்சாரியார் கருத்தின்படி, திருமகள், சேதனர்களில் முதன்மையானவரே தவிர திருமாலுக்கு இணை யான ஸ்தானம் இவருக்கில்லை. ஆனால் வேதாந்ததேசிகர் கூற்றின்படி, திருமகளுக்குத் திருமாலின் ஸ்தானம் உண்டு. பிள்ளைலோகாச்சாரியார், அடியார்களின் குற்றங்களையும் குணங்களாகக் கொள்கிறார் இறைவன் என்கிறார். குணங்களாகக் கொள்வதில்லை. அவற்றை இறைவன் பொருட்படுத்தவில்லை என்பது தேசிகர் கருத்து. எந்தச் சாதியில் பிறந்திருந்தாலும், நன்கு கற்றவராகவும், பக்தியும்

உடையவராக ஒருவர் இருந்தால் அவர் ஆச்சாரியாராகத் தகுதி உண்டு என்பது லோகாச்சாரியார் வாதம். பிராமணர்களுக்குத் தான் இந்தத் தகுதி பிறவியினால் வருகிறது என்கிறார் தேசிகர். ராமானுஜரை நன்கு உணர்ந்திருந்த லோகாச்சாரியார் வர்ணாஸ்ரமத்தை எதிர்த்தார் என்றுதான் சொல்ல வேண்டும். தேசிகருக்கு இது உடன்பாடில்லை.

இறைவன் அருள் தானாகச் சுரந்து அடியாரைச் சென்றடைவதால், இதற்கு அடியாரின் முயற்சியென்று எதுவும் தேவையில்லை என்பது பிள்ளைலோகாச்சாரியார் கருத்து. அடியார் இவ்வருளைப் பெறுவதற்கான தம் ஆவலையும், முயற்சியும் செய்ய வேண்டுமென்கிறார் வேதாந்த தேசிகர்.

பிள்ளைலோகாசாரியாருக்குப் பிறகு வந்த மணவாள மாமுனிகளும் அவர் அடியொற்றித் தம் கருத்துக்களைத் தெரிவிக்கிறார். ஆனால் இக்காலக் கட்டத்தில் இவை வெறும் கருத்து வேறுபாடுகளாக இருந்தனவே தவிர, கொள்கைப் போராட்டங்கள் ஆகவில்லை.

பதினெட்டாம் நூற்றாண்டில், வரலாற்று நிர்ப்பந்தக் காரணங்களினால், தமிழகத்திலிருந்த பிரபலப் பெருமாள் கோயில் நிர்வாகம் மணவாள மாமுனிகளின் கோட்பாடுகளை ஏற்றுக்கொண்டவர்கள் வசம் இருந்தது. முஸ்லிம் ஆக்ரமிப்புக்குப் பிறகு, இக்கோயில்கள் மீண்டும் சிறப்படைவதற்கு பாடுபட்டவர் மணவாளமாமுனிகள். 'அஷ்டதிக் கஜங்கள்' என்று எட்டு கோயில் நிர்வாகப் பொறுப்புக்களை உருவாக்கியவர் மாமுனிகள். இவர்களுடைய குரு பரம்பரை, மணவாள மாமுனிகள் வழி ராமானுஜர் பிரதம சிஷ்யர் பிள்ளான் வரை இருந்தது. வேதாந்த தேசிகரை ஏற்றுக் கொண்டவர்களுக்கு இந்தப் பாரம்பரியம் இருந்ததாகச் சொல்ல முடியாது. அனைவரும் வைணவ - ராமானுஜப் பாரம்பரியத்தில் வந்தவர்கள் என்றாலும், வேதாந்த தேசிகருக்கும் பிள்ளை லோகாச்சாரியாருக்குமிடையே நிலவிய சிறு கருத்து வேறுபாடுகளைப் பயன்படுத்திக் கொண்டு, கோயில்

நிர்வாகங்களைக் கைப்பற்ற வேண்டும் என்ற தங்கள் ஆசைக்குக் கொள்கைப் போர்வைப் போர்த்தியதினால் இரு வருக்குமிடையே பிளவுகள் அதிகரித்து, வடகலை, தென் கலை என்ற பிரிவுகள் வைணவத்தில் தோன்றின. இதை ராமானுஜரோ, பிள்ளைலோகாச்சாரியாரோ, அல்லது வேதாந்ததேசிகரோ எதிர்பார்த்திருக்க முடியாது.

பாரதம் முழுவதும் பலவிதமான சமய இயக்கங்கள் தோன்று வதற்குக் காரணமாக இருந்தார் ராமானுஜர். நிம்பார்கர் என்ற தெலுங்கு அந்தணர் ராமானுஜருடன் சமகாலத்தவர் என்பார் கள். அவர் அத்வைதத்துடன் வேறுபட்டு, ராமானுஜர் கண்ட விசிஷ்டாத்வைத கருத்துக்கு ஓரளவு இணங்கி, 'சௌரவம்' என்ற பாஷ்யத்தை எழுதியுள்ளார்.

துவைத மதத்தை ஸ்தாபித்த மாத்வர், ராமானுஜருக்குப் பிறகு வந்தவர். ராமானுஜருடன் அவர் மாறுபட்டாலும், அத்வை தத்தின் மாயவாதத்தை எதிர்ப்பதில் இவர் கருத்தும் விசிஷ் டாத்வைத கருத்தும் ஒன்றுபட்டிருக்கின்றன.

வடநாட்டில் பக்தி இயக்கத்துக்குக் காரணமாக விளங்கியவர் இராமாநந்தர். இவர் காலம் பதினான்காம் நூற்றாண்டு. இவருக்கும் ராமானுஜரைப் போலவே, வைதிக மதத்திலிருந்த அர்த்தமற்ற பல சடங்குகள் பிடிக்கவில்லை. ராமன்தான் தனிப்பட்ட, குடும்ப, சமுதாய, தர்மத்தின் பிரதிநிதி என்பது இவர் கருத்து.

கிருஷ்ண சைதன்யர் வங்காளத்தில் வைஷ்ணவ மதம் பரவு வதற்கு ஊன்றுகோலாக இருந்தார். அவர் 'கிருஷ்ண பிராண' இயக்கத்தை எங்கும் பரப்பி வந்தார். காரணம், காரியம் இரண்டும் கிருஷ்ணாவதாரத்தில் பூர்த்தியாகிறது என்பது இவர் உபதேசத்தின் அடிப்படை.

ஜயதேவர் 'கீத கோவிந்தம்' என்ற நூலை இயற்றினார். ஆழ்வார்களின் நாயக நாயகி பாவத்தை இவர் செய்யுள்களில்

காணலாம். இவர் பாடல்களில் மதுரபாவம் இழைந்தோடு கின்றது.

மகாராஷ்டிரத்தில் தோன்றிய வைணவப் பெரியார்கள் நாம் தேவ், ஏக்நாத், துக்காராம், ராம்தாஸ். பக்தியை மதத்தின் அடிப்படையாக வைத்து உபதேசம் செய்து வந்தார் ராம்தாஸ். சமயத்தையும் அரசியலையும் ஒன்று சேர்த்து, நல்ல ஒழுக்க முள்ள அரசனே சமயத்தின் குறிக்கோள் என்பது போல போதித்து வந்தார். மராட்டிய மாமன்னன் சிவாஜி இவர் தத்துவத்தால் மிகவும் கவரப்பட்டார்.

சீக்கிய மதத்துக்கும், வைணவ மதத்துக்கும் பல ஒற்றுமைகள் காணப்படுகின்றன. ஆச்சாரிய அபிமானம் இரண்டு மதங் களுக்கும் பொது. பல நல்ல பண்புகளின் உருவகமாகத் தங்கள் குருக்களைக் கண்டார்கள் சீக்கிய மதத்தினர். மனிதன் இறை வனின் வஸ்து. மத அடியார்களுக்குள் உயர்வு தாழ்வு கிடை யாது என்பதும் வைணவத்துக்கும் சீக்கியத்துக்குமுள்ள ஒற்றுமையைக் காட்டுகின்றது.

இக்காலத்தில் மகாத்மா காந்தி வைணவ மதக் கொள்கைகளை வற்புறுத்தி வந்தார். ராமானுஜருடைய உபதேசத்தின் பொருளை காந்தியடிகளுக்குப் பிடித்த வைஷ்ணவ ஜனதோ (நார்ஸி மேத்தா இயற்றியுள்ள பாடல்) என்ற செய்யுளில் காணலாம்.

ராமானுஜர் பரப்பிய வைணவ சமயம் உலகத்தில் மனிதனின் கடமைகளை வற்புறுத்தும் ஒரு ஆக்க வழி நெறியாகும். இவ்வுலக வாழ்க்கையில் ஹிந்து சமயம் அதிக நம்பிக்கை வைப்பதில்லை என்ற தவறான கருத்தை மறுப்பது ராமானுஜ தரிசனம்.

## சித்தாந்த சாரம்



உபநிஷதங்கள் உலகத்தின் முழுமுதற்பொருளை இறை நிலையாகக் கண்டன. ராமானுஜர் இதற்குத் தனி மனிதனின் மனத்துக்கு இசைந்த ஒரு வடிவம் தந்தார். இறைவன் ஒன்றுதான்; ஆனால், அவனுக்கென்று விசேஷ குணங்கள் உண்டு. ஈசுவரன், அசித், சித் ஆகிய மூன்றின் பிரிக்க முடியாத தொடர்பே இயங்கும் உலகம்.

சித்து = உயிர். அசித்து = மக்கள், விலங்கு ஆகிய வற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லா வற்றுக்கும் காரணமான பிரகிருதி. இவை தனித்தனி இயல்புமுடையன. அழிவில்லாதவை. இந்த மூன்றின் தொடர்பான தத்துவத்துக்குத் 'தத்துவத் திரயம்' என்று பெயர்.

உபநிஷத் கூறுகிறது: 'பிரம்மவித் அப்நோட்டிபரம்' அதாவது 'பிரம்மத்தை உணர்ந்தவன் உயர்ந்த பேறு எய்துகிறான்' (தைத்தி உபநிஷத் ஐஐ). வேதாந்தத்தில் தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் என்று மூன்று வகையாகச்

சொல்லுவார்கள். இறைவன் தான் அறியப்பட வேண்டிய பொருள் என்று உணர்வது தத்துவம். ஹிதம், இறைவனை உணரவேண்டிய முறைகளைப் பற்றியது. புருஷார்த்தம், இறைவனை உணர்ந்து ஒன்றுவது.

இறைவனுக்குக் குறைகள் இல்லை. அவன் சத்பொருள். அழகும், இனிமையும் கொண்ட தோற்றமே அவன் தெய்வீக சரீரம். அவனுடைய இயல்பான, அடிப்படைப் பண்பு கருணை. மனிதனை நாடி அவனை உயர்த்துவதே இறைவனின் தவிர்க்க முடியாத குணம். கருணையே அவன் செயல்களுக்கு மூல காரணம்.

ஈசுவரன். சித்து, அசித்து இரண்டினுள்ளும் அந்தர்யாமியாக உள்ளான். இதுவே நுண்ணிய நிலை. மூலப்பகுதி பரந்துபட்டு, மக்கள் - மிருகங்கள் ஆகியவற்றின் சரீரங்களாகவும் இன்னும் பிற பொருள்களாகவும் ஆகின்றது. உயிர் தன்னுடைய புண்ணிய பாவத்துக்கேற்ப ஒவ்வொரு சரீரத்தை அடைகின்றது. மூலப் பகுதியின் விகாரமாகிய இறைவன் எல்லாவற்றினிடத்தும் அந்தர்யாமியாக இருக்கும் நிலை பரு நிலை. உடம்புக்கு வளர்தல், குறைதல் போன்ற விகாரங்கள் உண்டு. உயிருக்கு இந்த விகாரங்கள் இல்லை. ஆனால், இன்ப துன்ப உணர்ச்சிகள் உண்டு. இறைவனுக்கு, உடம்பின் விகாரங்களோ அல்லது உயிரின் இன்ப, துன்ப உணர்ச்சிகளோ இல்லை. உயிர் உடம்பைத் தன்னுடலாகக் கொண்டிருக்கிறது. உயிர், உடம்பு ஆகிய இரண்டையும் தன் உடம்பாகக் கொண்டிருக்கிறான் இறைவன்.

மாம்பழத்துக்கு நிறம், சுவை, மணம், தோல் ஆகியவை உண்டு. இவற்றின் சேர்க்கையை மாம்பழம் என்கிறோம். நிறம், சுவை முதலியன மாம்பழத்தின் குணங்கள். அவற்றுக்கென்று தனித்தனியே இயக்கம் கிடையாது. அதுபோல், ஈசுவரனின்றி இயங்கும் உலகம் இல்லை. ஈசுவரனுடைய

விசேஷ குணங்கள், உயிர், உடல் இவை எப்பொழுதும் பிரிக்க வொண்ணாதபடி ஒன்றுசேர நிற்கின்றன. ஆகவே விசேஷிக்கப்பட்ட அத்வைதமே வைணவப் பெருந்தத்துவம் (விசிஷ்டாத்வைதம்).

சித், அசித்தினின்றும் வேறுபட்டது. ஆனால், உயிரின் இயக்கம், உடம்பில்தான். ஆகவே இவற்றின் தொடர்பை மனோ நிலை, பௌதிக நிலை ஆகியவற்றின் அடிப்படையில்தான் ஆராயமுடியும். சரீரம் வாழ்கிறது, மூச்சு விடுகிறது, இயங்குகிறது, உணர்கிறது, செயலாற்றுகிறது. இதன் மற்றைய பொருள்களுடன் கொள்ளும் தொடர்பே வாழ்க்கை என்கி றோம். உடலற்ற உயிர், சிறகுகளற்ற பறவை போலாகும். உயிர், உடலுடன் இணைந்துதான் செயலாற்ற முடியும். உயிரும் உடலும் ஒன்றுடன் ஒன்று சேர்ந்துதான் இயங்க முடியும்.

உயிர் உடலுடன் இசைந்தாலும், உடலுக்கு அப்பாற்பட்டது. உடலுடன் இயங்குவதோடு மட்டும் அதன் பணி பூர்த்தியாக வில்லை. ஈசுவரனோடு இணையாத தனித்ததொரு இயக்க மாக அது நினைத்து செருக்கு மேற்கொண்டால், அது தானடை வதற்கான தகுதிபெற்ற உயர்கதியை அடையாது.

இறைவனுடன் ஒன்றுவதுதான் அதன் தகுதி. அதற்கு நியமிக்கப்பட்டுள்ள உயர்கதி. மனிதனுக்கு இறைவனை வழி படத்தான் உடம்பு இருக்கிறது. உறுப்புக்கள் இருக்கின்றன. ஆகவே உடம்பே, உயிருடன் கூடிய தன் தொடர்புதான் இறுதி என்று செருக்குக் கொள்வதற்கும், இன்னொரு வகையில், இறைவனாகிய உயர்கதியை அடைவதற்கும் காரணமாக இருப்பதால், அதுவே தளையாகவும் அதுவே மோட்சத்துக்கு வழியாகவும் இருக்கிறது. தன் வழியைத் தேர்ந்தெடுப் பதற்கான உரிமை மனிதனுக்கு உண்டு. ஆகவே இவ்வுலகில் அவன் செயல்களுக்கு அவன்தான் பொறுப்பு. தீதும் நன்றும் அவன் ஆற்ற வருவனவாகும்.

மனிதன் எந்த விதத்தில் தனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் சுதந்திரத்தைப் பயன்படுத்துகிறான் என்பதைத் தெரிவிப்பது தான் விதியின் தத்துவம். விதை விதைப்பதற்கேற்ப விளைவும் அமையும்.

விதியை வெல்வதற்கு வழியுண்டு. அதுதான் சரணாகதித் தத்துவம். இறைவனே புகலிடம் என்று அவனிடம் சரண் அடைந்துவிட்டால், உயர்வதற்கு வழியுண்டு. இறைவனே வாழ்க்கையின் இலட்சியம். அவனே அவனை அடைவதற்கும் உபாயம்.

மனிதன் உடம்பெடுத்ததன் காரணமாகப் பல பௌதீக நிலைகள் உண்டு. குழந்தைப் பருவம், இளமைப் பருவம் முதலியன. ஒவ்வொரு பருவத்துக்கும் அனுஷ்டிக்க வேண்டிய பல கடமைகள் இருக்கின்றன. கடமையை ஆற்றுவதன் மூலம் இறைவனே கதி என்று தானாக நினைக்கக்கூடிய சுதந்திர வேட்கை ஏற்படும். ஆகவே செயலிலும், செயலினின்றும் நாடும் அர்த்தமுள்ள சுதந்திரமே மோட்சம். இறைவனே இறுதிக் குறிக்கோள். இந்த உணர்வே நம் வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கற்பிக்கும்.

ராமானுஜர் ஒரு கதை மூலம் விளக்குகிறார்: ஒரு இளவரசன் சிறு வயதிலேயே காணாமல் போய்விடுகிறான். ஒரு அந்தணன் அவனை வளர்க்கிறான். பதினாறு வயது எட்டியதும், அந்த இளவரசன் தன் தந்தைதான் நாட்டை ஆளும் மன்னன் என்று அறிகிறான். மீண்டும் தன் தந்தையை அடைய அவன் நாட்டம் கொள்ளுகிறான். அரசன் அவனை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறான்.

இளவரசன்தான் உலகில் உடம்புடன் இணையும் ஆத்மா. அந்தணன்தான் குரு. அரசன்தான் இறைவன். உயிரை வரவேற்று தன்னுடன் இருத்திக் கொள்வதே இறைவனின் விருப்பம்.

மனிதன் அறிகிறான், செயலாற்றுகிறான், அனுபவிக்கிறான். அவனுக்கு இதில் தன்னை ஈடுபடுத்தும் நினைவு இருக்கிறது. நல்லதோ, கெட்டதோ... ஆற்றக்கூடிய உரிமை அவனுக்கு உண்டு. இந்தச் சுதந்திரமே அவனுக்குக் கஷ்டத்தைத் தரலாம். ஏனெனில் சுதந்திரத்தைச் சரிவர பயன்படுத்துவது எளிதான விஷயமல்ல.

எல்லாம் இறைவனுக்குரியது என்ற உணர்வு வேண்டும். மற்றவர்களுக்காக வாழ்தல் என்ற எண்ணம் அப்பொழுதுதான் உண்டாகும். மற்றவர்களுக்கு நிழலையும், கனியையும் தரும் மரத்தைப் போல மனிதன் வாழ வேண்டும்.

அஷ்டாட்சர மந்திரமாகிய 'ஓம் நமோ நாராயணாய' என்பது மனிதனை இறைவனுக்காகவும், அவனுடைய உடமைப் பொருள்களாகிய மக்களுக்காகவும் வாழ வேண்டும் என்ற உண்மையை வற்புறுத்தும். சூரிய நாராயணன் முதல் தரித்திர நாராயணன் வரை யாவரையும் வணங்கி அவர்களுக்காகச் சேவை செய்யக்கூடிய உணர்வை இது ஏற்படுத்தும்.

மூன்று வகையான உயிர்கள் உண்டு. சம்சாரிகள், ஜீவன் முக்தர்கள், நித்திய சூரிகள். சம்சாரிகளுக்குத் தாமும் முக்திய டைவதற்கு வழியுண்டு என்ற உணர்வு விழிப்படையாமல் இருக்கிறது.

இதற்குக் காரணம், உடம்பே உயிர் என்று நினைப்பதுதான். எள்ளுக்குள் எண்ணெய் இருப்பது போல, மரத்துக்குள் வெப்பம் இருப்பது போல, முக்தியை நாடும் உணர்வு இவர்களுக்குள் அடங்கிக் கிடக்கிறது. ஆத்மிக விழிப்பு இவர்களுக்குத் தம் ஆற்றலை உணர்த்தும். ஆத்மிக விழிப்புக்கு அடிகோலுவது ஞானம். இன்னொரு நிலை பக்தி. இறைவனை, இதயத்தின் மொழியாகிய பக்தி மூலம் நிச்சய மாக அடைய முடியும்.

வைணவத்தின் அடிப்படைத் தத்துவம் பக்தி. ராமானுஜர் ஆழ்வார் பாடல்களில் திளைத்து, அவர் தம் அனுபவமாகிய பக்தியையே வைணவ மதத்தின் ஊன்றுகோலாக்கினார்.

கடவுளை அடைய பல வழிகள் இருந்தாலும், உறுதியான வழி பிரபத்தி. அதாவது, அவனைச் சரணடைதல். இறைவன்மீது பொறுப்பைச் சுமத்திவிட்டு, அவன் வழி நின்று, சரணடைந்த நிலையில் செயலாற்றுதல். அவனை மனப்பூர்வமாகச் சரணடைந்து விட்டால், தீமை தரும் வழிகளை மனம் நாடாது. அன்பு, அடக்கம், கருணை, மன்னிக்கும் மனோபாவம், சாந்தி, எளிமை, அறிவு, உண்மை ஆகிய பண்புகள்தாம் ஏற்பாடு.

இறைவனின் உடைமைப் பொருள்களுக்குச் சேவை செய்வதே கைங்கர்யம். மோட்சம் என்பது கைங்கர்யம். இறைவன் எல்லோரிடத்தும், எல்லாவற்றினிடத்தும் இருக்கிறான். அவர்களுக்கும் அவற்றுக்கும் கைங்கர்யம் செய்தால், அவனுக்குக் கைங்கர்யம் செய்வது போலாகும். நம்மிடத்து இறைவன் இருப்பதால், இந்த உயிரையும், உடலையும், அவன் இருப்பதற்குத் தகுதியுள்ள இடமாகச் செய்தல் வேண்டும். நாம் தகுதியாக வாழ முற்பட்டால், பரமபதத்தைக் காட்டிலும், இக உலக வாழ்வு நன்று. தொண்டரடிப் பொடி ஆழ்வார் பாசுரத்தை ராமானுஜர் அடிக்கடி கூறுவது வழக்கம்:

'பச்சைமா மலை போல் மேனி, பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமர ரேறே! ஆயர் தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர, யான் போய், இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன், அரங்கமா நகருளானே!'

இந்த உண்மையை வற்புறுத்த ராமானுஜர் மூன்று நூல்களை இயற்றியுள்ளார். சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கதயம், வைகுண்ட கத்யம்.

சத்துவம், ராஜேஷ், தாமஸ் ஆகிய மூன்று குணங்களின் கூட்டுறவே பிராகிருதி. உலகம் பிராகிருதியினின்றும் உண்டாகியது. அசித், சித் ஆகிய இரண்டோடும் ஈசுவரன் கொண்டு உள்ள தொடர்பை ராமானுஜர் சரீர-சரீரி பாவம், விசேஷண-விசேஷ பாவம். சேஷ சேஷி பாவம், அம்சா-அம்சி பாவம், ஆதார-ஆதேய பாவம், நியமிந்தா-நியாம்ய (ஆண்டவன்-

ஆண்டை) பாவம், ரக்ஷ்ய-ரக்ஷக பாவம் என்று பல நிலைகளில் ஆராய்கிறார்.

சரீரத்தை உயிர் ஆளுகிறது. சரீரத்துக்கு அறிவு இல்லை. உயிருக்குண்டு. உயிர், சரீரத்தினின்றும் வேறுபட்டது; நிலையானது. ஈசுவரன் இவற்றைத் தன் உடலாகக் கொண்டுள்ளான். இதைத்தான் விசேஷண-விசேஷ பாவம் என்றும், பிரகார-பிரகாரி என்றும் கூறுவார்கள். இந்தத் தொடர்பை ஒரு உதாரணம் மூலம் விளக்குகிறார் ராமானுஜர். மூன்று நிறத்துடன் கூடிய ஒரு துணி இருக்கிறது. மூன்று நிற நூல்களும் ஓரிடத்தில் வெள்ளை நிற நூலால் இணைக்கப்பட்டு, முழுத் துணியாக, மூன்று நிறத் துணியாக விளங்குகிறது. இதில் ஒரு விதக் குழப்பமுமில்லை. ஒவ்வொன்றுக்கும் தனித்தனியான தோற்றம் இல்லை என்று சொல்ல முடியாது. அதுபோலதான், இறைவனும், அசித்தையும், சித்தையும் இணைத்துக் கொண்டு, உலகின் ஆதி காரணமாக இருக்கிறான்.

இறைவன் ஐந்து வழிகளில் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு இருக்கிறார். 1. பரம், 2. வியூகம், 3. விபவம், 4. அந்தர்யாமி, 5. அர்ச்சாவதாரம்.

பரப்பிரம்மம், பரம் எனப்படும். அவருடைய நித்ய விபூதி வாசம் வியூகம். வியூகம் நான்கு வகைப்படும். வாசுதேவன், சங்கருடணன், பிரத்தியும்நன், அநிருத்தன். அவதாரத்தில் தன்னை வெளிப்படுத்துவதுதான் விபவம். எல்லா உயிர்களிடத்தும் உட்கரந்து உறைவது அந்தர்யாமி. விக்கிரக வடிவமாக நின்று உலகை உய்விப்பது அர்ச்சாவதாரம்.

இறைவனே உடையவன். உயிர்கள் உடைமைப் பொருள்கள் என்று கருதுவது சேஷா-சேஷி பாவம்.

இறைவனே ஆதாரம். மற்றவை, அவனை ஆதாரமாகக் கொண்டு இயங்குபவை என்பது ஆதார-ஆதேய சம்பந்தம். அசித் நுண்ணிய நிலையில் இருப்பதற்கு பிராகிருதி என்று பெயர். இறைவன் இதை உலகமாகச் செய்கிறான்.

உலகம் இறைவனிடத்துள்ளது. அவன் அதை ஆண்டு நியமிப்பதுதான் நியந்தா-நியாம்ய பாவம்.

இறைவன் உயிர்களை ரட்சிக்கிறான். அவனால் எல்லா உயிர்களும் காப்பாற்றப்படுகின்றன. அவன் அருங்குணங்கள் சௌலப்யம் (எளிமை), சௌசீல்யம். இந்நிலையைச் சொல்வதுதான் ரக்ஷ-ரக்ஷக பாவம்.

ராமானுஜர் தர்மபூத ஞானம் என்று புதிய கொள்கையை வகுத்துக் கூறுகிறார். யதார்த்தம் என்பது புறப்பொருள்களைப் பற்றிய அறிவு. லட்சியம் என்பது மனத்தளவில் இயங்குவது. யதார்த்தம், மனத்தில் தோன்றும் எண்ணங்களுக்கு உரிய இடத்தைத் தருவதில்லை. ஆனால், இலட்சியம் புறப்பொருள்களைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. தர்மபூத ஞானம் இந்த வேறுபாட்டுக்கு ஒரு உடன்பாடாகக் காணப்படுகிறது. புறப்பொருள்களின் பௌதீகத்தை ஒப்புக்கொண்டு, அசித்-சித் தொடர்பையும் விளக்குகிறது. சித், அசித் இரண்டும் ஈசுவரனுக்கு உடம்பாக இயங்குகின்றன. சுயப் பிரகாசத்துடன் இறைவனை உணர வைப்பது தர்மபூத ஞானம். ஞானத்தின் எல்லையை விரிவடையச் செய்து எல்லையற்ற தன்மையின் சொரூபத்தைக் காட்டுவது தர்மபூத ஞானம்.

ராமானுஜர் நிர்குண பிரம்மத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. 'நேதி', 'நேதி' (இல்லை, இல்லை) என்பதும் குறிப்பிட்ட சில குணங்கள்தாம் பிரும்மம் என்று சொல்வதும் தவறு என்பதை உணர்த்துகின்றது என்று அவர் கூறினார்.

அறிவு என்பது இறைவனை உணர்வது என்றுதான் அர்த்தம். குற்றம், அரைகுறை அறிவாகும். ஒரு நெருப்புப் பந்தம் சுற்றும்போது ஒரு வட்டம் உண்டாகிறது. அது ஒவ்வொரு புள்ளியாக இருந்தபோதிலும், நாம் ஒவ்வொரு நிலையிலும் அதைப் பார்ப்பதில்லை. முழு வட்டத்தைத்தான் பார்க்கிறோம். அதுபோல, சம்சாரத்தில் நமக்கு உண்மை ஒவ்வொரு நிலையில்தான் தெரிகின்றதேயன்றி, உண்மையில்

முழுத்தோற்றமும் தெரிவதில்லை. உண்மையை அறிய உதவுவன 1. அனுமானம், 2. சப்தம்.

சரணாகதித் தத்துவத்தை விரித்துணர்ந்தார் ராமானுஜர். சம்சாரத்தில் உழலும் ஜீவன் இறைவனை நாடுவது இயல்பு. ஆனால், நித்ய கடமைகளை அவன் பணியாகக் கொண்டு, பொறுப்பை அவனிடத்து ஒப்படைத்துவிட்டு, செயலாற்றுவதுதான் ஜீவனுக்குரிய தகுதி. இறைவனை நாடும் பக்தர்கள் தங்கள் அனுபவங்களைச் சொல்லால் வடித்து, எஞ்சினவற்றைக் கண்ணீராகப் பெருக்குகிறார்கள். முக்தி பரம பதத்தை அடைவதாகும். நாராயணனுடன் ஒன்றுபடுவதே முக்தியாகும்.

இறைவனைப் புவன சுந்தரனாகக் கண்டார் ராமானுஜர். அவன் எல்லையற்றவனாக இருந்தாலும், பக்தர்களைக் கவர அவன் அழகிய சொரூபம் மேற்கொண்டு வருகிறான்.

விசிஷ்டாத்வைதம் சமய ஒழுக்கத்தையும், சமய அனுபவத்தையும் விளக்குகிறது. அது வெறும் கொள்கைகளின் அடுக்கு அல்ல. ஆனால், செயலைத் தன் அடிப்படையாகக் கொண்டு விளங்கும் வாழ்க்கை விளக்கம். இறைவனருள் எல்லாச் சமயத்தினருக்கும், ஜாதியினருக்கும் உண்டு என்ற முற்போக்கான கருத்தை உலகத்துக்கு அளித்தது விசிஷ்டாத்வைதம். ராம-ராஜ்யம் என்று காந்தியடிகள் கண்டது ராமானுஜர் வகுத்த வைஷ்ணவ மதத்தின் அரசியல் வியாக்கியானம்.

## ராமானுஜர் சொல்கிறார்



1. பிரும்ஹம் என்ற சொல்லை ஆராய்வோம். குற்றமே இல்லாத, மிகச் சிறந்த, எல்லா நற்குணங் களுடன் கூடியது பிரும்ஹம்.

2. 'ஜிக் ஞாச' என்றால் 'அறிய வேண்டுமென்ற விழைவை' குறிக்கிறது. எதை அறிய வேண்டும்? - பிரும்ஹத்தைத்தான் என்ற விடையும் இதில் தொக்கி யுள்ளது. கேள்வி, மனனம், இடையீடில்லாத தியானம் - ஆகியவற்றைக் கொண்டு வேத வாக்கியங்களின் பொருளைத் தெளிதல் வேண்டும்.

3. தியானம் என்றால், எண்ணெயின் ஒழுக்கு போல், நினைவுகளின் தொடர்ச்சி. பொருளை வகை கண்டு தொடர்புப் படுத்திக் காணும் ஆற்றலினால், நினைவு, பொருளை நேராக அறிகிறது.

4. பொருள்களை அந்தந்த நிலையில் காணும் வெறும் யதார்த்தப் பூர்வமான அறிவு நம்மை ஏமாற்றிவிடும். ஒரு கயிற்றைப் பார்த்து, பாம்பு

என்று மயங்கினால், இந்த மயக்கத்துக்குக் காரணமாகின்றது காட்சி - உண்மையான கயிறு. ஆகவே, நம்மை இவ்வாறு மயங்கச் செய்வது, உலகிலுள்ள வெவ்வேறு பொருள்களின் வேறுபாட்டைப் பகுத்துரை செய்யும் அறிவு. பிரும்ஹத்தைப் பொருத்தவரையில் இந்த வேறுபாட்டைப் பற்றிய அறிவு செல்லாது என்ற காரணத்தால், இல்லாத அதன் தன்மையில் அது மாயையாகத் தோன்றும். நிர்குணமான ஒன்றைப் பற்றிப் பேசுபவர்கள், நிர்குணமானது எது என்றால் பதில் சொல்ல முடியாது. 'நான் இதைப் பார்த்தேன்' என்று சொல்லும்போது, பார்க்கப்படும் பொருள் விசேஷமாகக் குறிக்கப்படுவதாகிய குணத்தைப் பெறுகின்றது. இந்தக் குணத்தை நாம் உணரும் அனுபவத்துக்குச் சாட்சி நம் ஆத்மா.

ஒரு பொருளின் உண்மையே அதன் குணமாக அமைகின்ற காரணத்தால், அதை உணரும் நம் அனுபவத்தைக் காட்டிலும் வேறொன்றால் அதை நிரூபிக்க முடியாது. அதை விளக்கு வதற்கு அதன் குணம் கொண்டுதான் சொல்லவேண்டும். ஆகவே ஒரு பொருளின் உண்மையை மறுக்கும்போது, அதன் சில குணங்களையோ, விசேஷங்களையோ மறுக்கலாமே யின்றி, அப்பொருளை மறுத்தலாகாது. எதையும் சொல்ல முடியாதென்பது பெறப்படும்.

5. ஒரு செயற்கைப் பூவின் அருமையான சிகப்பு வண்ணம், அருகில் ஒரு பளிங்குக்கல் இருந்தால், பளிங்கின் தெளிவான பின்னணியில், இன்னும் பன் மடங்கு பொலிவுடன் விளங்கும்.

6. கண்ணாடியில் முகத்தின் பிம்பம் தெரிகிறது. இதுவும் காட்சி உண்மையின் அடிப்படையில்தான். கண்களிலிருந்து புறப்படும் கதிர்கள், கண்ணாடியால் பிரதிபலிக்கப்பட்டு நம் கண்ணுக்குப் புலனாகின்றன. கண்களிலிருந்து புறப்படும் கதிர்ச் செலவும், பிரதிபலிப்பும் உடன் நிகழ்கின்ற காரணத் தால், கண்ணாடிக்கும் பிம்பத்துக்கும் இடையே உள்ள பௌதீக இடைவெளி புலனாவதில்லை. இத்தகைய மயக்கம் நிகழ்வது உண்மை என்ற காரணத்தால், ஒரு இடத்தை வேறு

இடமாகக் கண்டு மயங்கும் அனுபவம். யதார்த்தப் பூர்வமாக உண்மை என்று உணரலாம்.

7. இறைவன் பரிபூரணமான ஆனந்த மயமானவன்; நற்குணங்களின் கொள்கலன். தீமைக்கு எதிர்மறை. உலகத்தை ஆக்கிக்காத்து, நீக்கும் அலகிலா விளையாட்டுடையவன். மற்றைய எல்லா பொருள்களினின்றும் வேறுபட்டவன். தன் இச்சையினால் தான் எண்ணியவற்றைச் செயலாற்றுபவன். கருணைக் கடல்.

8. அவனைச் சரணாக அடை. உன்னுடைய ஆத்மா இதனால் பிரகாசிக்கும். எல்லா தெய்வங்களுக்கும் அவன் தலைவன் அவன்மீது அன்பு வைத்தாயானால், என்றும் அவன் நிழலில் வாழலாம். இந்த அனுபவம் உனக்கு மன அமைதியைத் தரும்.

9. என்னுடைய செல்வம், தந்தை, தாய் எல்லாமே இறைவன். அவனை என்று காண்பேன்? - என்னுடைய இந்தக் கைகளினால், என்று அவன் தாமரைத் திருவடிகளை வருடப் போகிறேன் என்று அவற்றுடன் ஒன்றி வேறுபாடொழிந்து சிறக்கப் போகிறேன்? அழியாப் பெருங்கடலாகிய இறைவனுடன் பொருந்தப்போகும் நாள் எந்நாளோ!

10. ஆத்மாவுக்கு குற்றங்கள் கிடையா. அது ஈசுவரனை என்றும் சார்ந்து இருக்கக்கூடிய காரணத்தால், இந்த நிரந்தரமான தூய தன்மையை என்றும் பெற்றிருக்கிறது. இவ்வாத்மா உலகத்துடன் இணையும் மற்றைய சம்பந்தங்களை இந்த அளவுகோல் கொண்டு நிர்ணயிக்க முடியாது.

11. 'நான்' அழிவதே வீடாகும். இந்த விடுதலையினால் தனக்கு என்ன பயன் என்று மனிதன் கேட்பது இயற்கை. தான் அழிந்த பிறகு, எஞ்சி நிற்பது எது என்று கேட்பதுதான் மனித சுபாவம்.

12. பிரும்ஹத்தை நேராக உய்த்துணரும் அனுபவமே உபாசனை.

13. பற்றை ஒழிப்பதும், பாவங்களினின்றும் நீங்கப் பெறுவதும் ஞானத்தினால் நிகழ்வதாகும்.

14. உலகில் எல்லாப் பொருள்களும் என்னைப் பொறுத்த வரையில் சமம். உயர்வு, தாழ்வு கிடையாது. ஜாதியில் உயர்ந் தவர், தாழ்ந்தவர், அறிவோர், எளியோர் என்று நான் வேறு பாடு பாராட்டுவதில்லை.

15. அறிவு அன்பாக மலர்ந்து ஸ்ரீநிவாசனை வழிபடட்டும். அவனுக்கு உலகத்தை ஆக்குவதும், காப்பதும், நீக்கலும் ஒரு இடையீடில்லாத விளையாட்டு. அடக்கத்துடன் தன்னை வழிபடுகின்ற அனைவரையும் அவன் காப்பது நிச்சயம்.

16. பொருளை அறிவது என்று சொல்லும்போது, அந்தப் பொருளை அந்தப் பொருளாகக் காணும், குண அமைப்பைப் பற்றிய வேறுபாட்டுணர்வும் அதில் அடங்கியிருக்கின்றது. 'இது ஜாடி, இது துணி' எனும்போது ஜாடியைத் துணியினின்றும் வேறுபட்டதாகக் காண்கின்ற அனு பவத்தையும் அது சொல்கின்றது. இந்த வேறுபாட்டுணர்வுக்கு இடமில்லை என்றால், குதிரையைத் தேடிச் செல்பவன், எருமையைக் கண்டு ஏன் சமாதானப்படக்கூடாது?

17. அறிவதென்றால் வேறுபாடு கண்டு உணர்வதென்ற பொருள். அனுமானமும் இதே வகையைச் சார்ந்ததுதான். அனுமானத்துக்கு உறுதுணையாக இருப்பது அறிவு. பொருள் களின் தொடர்பை வகைப்படுத்திக் காண இது உதவி செய்யும். வேறுபாடற்ற பொருளைக் காண்பதற்கும், அறிவைக் கருவி யாகக் கொண்டுதான் பார்க்க முடியும்.

18. பிரும்ஹத்தை அறிவதைக் காட்டிலும் வேத வாக்கியங் களால் உணரமுடியும்.

19. வேத வாக்கியங்கள், நினைவை உள் செலுத்தி தியானம் செய்யச் சொல்கின்றன.

20. ஞானம், அது நிற்கும் அளவில், பொருளைத் தெளி வுறுத்திக் காட்டுகிறது.

21. ஞானத்தின் சுபாவம், பொருள்களைத் தன் அனுபவத்துக்கு இலக்காக்குதல். உள் நினைவுக்கும் இலக்குக்குமுள்ள தொடர்பாகிய ஞானம் கொண்டுதான், நாம் பொருள்களைப் பார்க்கிறோம், உணர்கிறோம், அனுபவிக்கிறோம்.

22. மக்களில் ஓரினத்துக்குக் கண்களில் பார்வை தோஷம் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அவர்கள் யாவரும் இப்பார்வையைக் கொண்டுதான் பொருளின் இயல்பைக் கணிப்பார்கள். அவர்களுக்கு வானத்தில் இரண்டு சந்திரன்கள் தெரிந்தால், அவர்களைப் பொருத்தவரையில் அதுதான் இயல்பு. ஆனால், அவர்கள் எல்லாருக்கும் இந்த தோஷம் இருக்கின்ற காரணத்தால், அவர்கள் பார்வை குற்றமற்றது என்று சொல்ல முடியுமா?

23. 'பிருஹத்' என்ற சொல்லினின்றும் பெறப்படும் 'பிரும்ஹம்' என்றால் நிறைவுள்ள, பரிபூரணமான குணங் களுடன் கூடிய அரும்பொருள் என்ற பொருள்.

24. பரம புருஷரைப் பற்றிச் சொல்வதுதான் உலகிலுள்ள எல்லா நிகழ்ச்சிகளும், சிந்தனைகளும். இவையே அவருடைய அருங்குணங்களாயும் அமைகின்றன. இந்தத் தொடர்பைப் பற்றி எண்ணுவதுதான் அதனுடைய அர்த்தமும்.

25. சித், அசித் இரண்டும் ஈசுவரனைப் பற்றித்தான் இயங்கு கின்றன.

26. கண்ணால் ஞாயிற்றைப் பார்க்கிறோம். கண்ணும் அவனே, ஞாயிறும் அவனே, இந்தத் தொடர்பும் அவனே.

27. ஆத்மா சுயேச்சையாக இயங்குகின்றதா? அல்லது அவன் இச்சையைச் செயலாக்கும் ஒரு சாதனமா? - ஆத்மா செய லாற்றுவதற்கு சுதந்திரம் இல்லையென்றால், 'இதைச் செய், அதைச் செய்யலாதே' என்ற நீதி உரைகளுக்கு அர்த்தமே கிடையாது. செயலாற்றும்போது அது செய்யக்கூடிய தவறு பற்றி எழுதுவதுதான் இவ்வறிவுரைகள்.

28. உலகுக்கும் இறைவனுக்குமுள்ள தொடர்பு, ஒரு முழுப் பொருளுக்கும் அதன் அங்கத்துக்குமுள்ள தொடர்பாகும். இறைவன் ஒளியானால், உலகம் அவ்வொளியால் பொலிவுறும் பொருளாகும். பராசரரும் இவ்வாறுதான் கூறுகிறார். 'நெருப்பின் சக்தியாகிய ஒளிப்பிழம்பு ஓரிடத்தில் இருந்து எங்கும் வெளிச்சம் தருவதுபோல், இறைவனும் உலகை விளக்கமுறச் செய்கிறான்'.

29. என் வாழ்வு அவனைப் பொறுத்து உள்ளது. நான் இல்லாமல் அவன் இல்லை. அவன் இல்லாமல் நான் இல்லை.

30. மரத்தை வெட்டி அம்மரத்தைச் செப்பனிட்டுப் பொருள் தயாரிக்கின்றோம். உலகம் செய்வதற்கு இறைவனே ஆதி மரம். அவனையே செப்பனிட்டு உலகம் உருவாகின்றது. இதைச் செய்பவனும் அவனே.

31. பிரக்ருதியை அடிப்படைப் பொருளாகக் கொண்டு, உலகம் உருவாகின்றது. இதுவே இறுதி விடுதலைக்கும் நிலைக்களனாக அமைகின்றது.

32. தச்சன் கையில் ஆயுதங்கள் இருக்கலாம். ஆனால், அவனுக்கு விருப்பமில்லாவிடில் அவனைச் செயலாற்ற வற்புறுத்த முடியாது. அதுபோல்தான் ஆத்மா, சரீரத்தைப் பெற்றிருந்தாலும், விருப்பப்படி செயலாற்றும்.

33. இறைவனை உட்கொண்டு வாழும் பக்தனுக்கு என்றும் ஆனந்தம் உண்டு. அவனை உட்கொள்ளாத வாழ்வு துயரம் தான். மனிதனுடைய குற்றங்கள்தாம் அவன் வேதனைக்குக் காரணம். 'இறைவனுடைய ஆதிக்கத்துக்குட்பட்டவர்கள் நாம்' என்று ஒரு பக்தன் உறுதியாக நம்புகிறான்.

34. திருமகளுடன் இணைந்து மாசற்ற ஆனந்தமயமாக இருப்பவனும், சித், அசித் ஆகிய பொருள்கள் அனைத்தையும் தன் சரீரமாகக் கொண்டவனுமான திருமாலை வணங்குகிறேன்.

35. இப்பொழுது, ஆகையால் பிரம்ஹத்தைப் பற்றி ஆராய்வோம்.

'இப்பொழுது' என்றபடியால் 'மேலே சொன்னவற்றுக்குப் பிறகு' என்று பொருள்படுகிறது. 'ஆகையால்' என்றபடியால், 'காணரங்கூறிவிட்டது' பெறப்படுகின்றது. நியமங்களை எல்லாம் விளக்கமாகக் கூறியபிறகு, வேதங்களைப் பற்றிய ஆராய்வின் அம்சமாக, பிரும்ஹத்தைப் பற்றிய ஆராய்வு ஆரம்பிக்கின்றது. நியமங்களைப் பற்றிய ஆராய்வு, 'இப் பொழுது, ஆகையால், தர்மத்தைப் பற்றி ஆராய்வோம்'. (மி 1.1) என்று தொடங்குவதனைக் கவனிக்க வேண்டும். 'கர்மத்தைச் செய்யவல்ல எல்லா ஜாதியினருக்கும் புரோகிதம் ஒன்றுதான்' (மி.12-4-40) என்று சூத்திரம் விதிக்கின்றது. 'அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றும் அடைவதற்கான சடங்குகள் இவை'.

36. இறைவனை ஆனந்தமயமாக உருவகம் செய்யும்போது அவனுக்கு ஒரு வடிவம் கொடுத்துப் பேசப்படுகிறது. இந்நிலையில் அவனைப் பரம புருஷனாக எண்ண முடியாது என்பது தவறு. ஏனென்றால் வடிவத்துடன் சம்பந்தப்பட்ட அளவில், இது பரம நிலையல்ல என்று கூறுவது. வேத வாக்கியத்துக்குப் பொருந்தாது. 'ஞாயிற்றின் உள்ளொளியில் ஒன்றிய அவன்' என்பது உபநிஷதம். (சாந்த். 1.6.6) இங்கு அவன் குணம் சொல்லப்படுவதின் காரணமாக, அவன் பரம நிலையல்ல என்று கூறுவது என்ன நியாயம்? அவனுடைய வியாபகம் இதன் மூலம் விளங்குவதோடு மட்டுமல்லாமல், அனைத்தும் அவன் ஆட்சிக்கு உட்பட்டுள்ளது என்பதையும் அறிய வேண்டும். உபநிஷதம் சொல்லுகின்றது. 'எல்லா உலகுகளுக்கும் அவன் நாயகன். பாவத்துக்கு அப்பாற் பட்டவன். (சாந்த்.1.6.7.)'

37. 'ஆத்மீக, அதற்குப் புறம்பான எல்லாவற்றையும் நிர்வகிக்கின்ற, சேஷ சயனத்தில் மகிழ்கின்ற ஆதிப்பரம் பொருளை வணங்குகிறேன்'.

38. யமுனை ரிஷியின் சிறப்பு ஓங்குக. அறியாமையை அவர் போக்கியுள்ளார். இறைவனுக்கு சம்சாரத்துடன் சம்பந்தப் பட்ட காரணத்தால் குறைகள் உண்டு என்ற தவறான கருத்தை அவன் நீக்கியுள்ளான். கர்மத்துடன் கொண்டுள்ள தொடர் பினால் - அதாவது, சித், அசித் கர்மத்துக்குட்பட்டதால் அதனுடன் கொண்ட தொடர்பினால் - இதுவும் அவனைப் பாதிக்கும் என்ற அறியாமையையும் அவன் நீங்கும்படி செய்தான்.'



**இன்பமே சூழ்க...**

**எல்லோரும் வாழ்க!**

தமிழகத்தில் பிறந்தவர். அறிவாளிகளின் தத்துவ விசாரணையாக இயங்கி வந்த விஷயத்தை எல்லாம் ஒரு பொதுஜன இயக்கமாக மாற்றியவர்.

சொல்வதன் சிறப்பு செயலில்தானே இருக்கிறது! அதன்படி வாழ்ந்த ஞான சூரியன். இவர் தோற்று வித்த 'விசிஷ்டாத்வைதம்' என்பது வெறும் கொள்கை முழக்கமல்ல; வழிகாட்டும் தத்துவ விளக்கம். முற்போக்கான சீரிய நெறி!

தீண்டாமை ஒழிப்பு சட்டரீதியாக கடந்த நூற்றாண் டில் செயல்பட்டதென்றாலும், பல நூற்றாண்டு களுக்கு முன்னரே ஆலயங்களில் ஹரிஜனப் பிரவேசத்துக்கு வழிவகுத்தவர் என்பது சரித்திர உண்மை.

ராம ராஜ்யம் என்று காந்தியடிகள் சொன்னாரே! அது ராமானுஜர் வகுத்த வைஷ்ணவ மதத்தின் அரசியல் வியாக்கியானம்தான்.

எளிய நடையில் அரிய விஷயங்களைச் சொல்வதற் காக இந்நூலில் பெருமுயற்சி எடுத்திருக்கிறார் இந்திரா பார்த்தசாரதி. இவரது எழுத்தை ரசிப்பதற் கென்றே பெருங்கூட்டமொன்று உண்டு. சிறப்பான படைப்புக்காக 'பாரதிய பாஷா பரிஷத்' விருது பெற்றவர் இவர்.

ரூ.50


ISBN 978-81-8368-301-2



வரம்
Religion
Cover Painting:
Maruthi